கடவுள் துணை

# தெய்வப்புலமைத்

# ள்ளுவ நாயனார்

திருவாய்மலர்ந்தருளிய

தமிழ்வேதமாகிய

# திருக்குறள் மூலமும்

பரிமேலழகர் இயற்றிய உரையும்




தெளிபொருள் விளக்கப் பதவுரையும்

தி. ஸ்ரீநிவாஸராகவாசாரியரவர்களால்

பரிசோதிக்கப்பட்டு,

சென்னை:

**B. இரத்தின நாயகர் & சன்ஸ்**

அவர்களாற்றமது

திருமகள்விலாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது.

1924.

 [விலை ரூபா. 4.




# முகவுரை.



தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் திருவாய்மலர்ந்தருளிய திருக்குறளென்னும் இந்நூலானது அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் ஆகப்பால் ௩-க்கு அதிகாரம் ௧௩௩; இவ்வதிகாரங்கள், ௧௩௩0-குறள் வெண்பாக்களாற் செய்யப்பட்டு, பாஷையின் உயர்வை விளக்குவதாயும், சொற்பொலிவு பொருட்பொலிவு முதலிய பாகுபாடுடையதாயும், இராஜதந்திர முதலிய பலவகைப்பட்ட சிறந்த நீதிநெறிகளை ஒருசேர நன்குணர்த்தத்தக்கதாயும், எல்லாச சமயிகளானு மினிதேற்றுக்கொள்ளப்பட்டதாயு முள்ளது. மேலும் தமிழ்ப்பாஷையில விருத்தியடைய விரும்புவோர்க்கும், உலகநடையுணர்ந்து அதன்வழிச செல்ல விரும்புவோர்க்கும், முத்திநெறிபெற்றுய்ய விரும்புவோர்க்கும் ஏற்ற நூலாகவும், ஏனையோர்க்குப் பொதுநூலாகவும் இருத்தலான், இதன் பெருமை குன்றின்மேலேற்றிய விளக்குப்போல் விளங்குகின்றது

இந்நூல் வேதசாரமா யிருத்தலால், ஆதியில் உரையாசிரியர்க ளாகிய நச்சினார்க்கினியா முதலியோர் இதற் குரையியற்றினரென் றும், அவற்றுள் பரிமேலழகர் என்பவர் இயற்றிய இலக்கண வுரை சொற்பொலிவும் பொருணயமும் நிறைந்து விளங்கியதால் சான் றோர் இவ்வுரையையே மேலாகக்கொண்டன ரென்றும் வழங்கி வரு கின்றது; ஆதலால் தமிழ்வேதமாகிய திருக்குறளும் இதற்குப் பரிமேலழகர் செய்தவுரையும் கற்றோர் யாவராலும் விரும்பத்தக் கனவே. இவ்வுரை அக்காலத்தி லுள்ளோருடைய கல்வித் தேர்ச் சிக்கேற்பச் செய்யப்பட்டதாதலால் கடினசந்திகளால் செறிந்து

விளங்குகின்றது; தற்கால நிலைமையைக்கருதிப் பண்டிதபாமரர் யாவருக்கும் எளிதில் பயன்படும் பொருட்டுக் கடினசந்திகளை ஒரு பிரித்து

2

பொருள் விளக்கப் பதவுரையும், பலபிரதிரூபங்களிலிருந்து தேர் தெடுக்கப்பட்ட மேற்கோட்பாக்களுஞ் சேர்த்து ஒரேபுத்தகமா யச்சிட்டனம்.

ஆன்மாவிற்கு இயற்கையாக வமைந்துள்ள திரோதானத் தால் ஏதாகினும் மாறுபாடு விளைந்திருக்குமேல் முன்பின் னாராய்ச்சி யால் முறைப்படுத்தி வாசித்துக்கொள்ளும்படி சன்மார்க்கர்களை வந்தனத்துடன் கேட்டுக்கொள்ளுகின்றனம்.

B. இரத்தின நாயகர் அண்டு சன்ஸ்,
புத்தக வியாபாரிகள்,
7-32, தைனியப்ப நாயக்கன் வீதி, பார்க் டவுன்,



உ
சிவமயம்.

# திருவள்ளுவர் சரித்திரம்.

புண்ணிய பூமியாகிய இப்பரதகண்டத்திலே இமயமலையினுச்சியிலே சிறப்புப்பொருந்தி விளங்கும் திருக்கயிலாயத்திலே உயர்வொப்பில்லாத செம்பொற்றிருக்கோயிலிலே திவ்வியசிங்காசனத்தின்மீது நித்தியானந்தராய்ச் சிவபெருமான், பிரமாதி முப்பத்துமுக்கோடி தேவர்கள், நாற்பத்தெண்ணாயிரம் இருடிகள், கின்னரர், கிம்புருடர், கருடர், காந்தருவர், சித்தர், வித்தியாதரர் முதலானவர்கள் இருபுடையும் சூழ்ந்து வணங்கித் தோத்திரித்து நிற்கவும், பூதர்கள் பலவாத்தியங்களை முழக்கியும், வெண்சாமரை வீசியும், ஆலவட்டம் அசைத்தும் நிற்கவும், ஹரஹர என்னும் பேரொலி

எங்கும் தழைத்தோங்கவும், தமது அருட்சத்தியும் உலகமாதாவுமாகிய உமாதேவியார் இடப்பக்கத்தில் வீற்றிருக்கவும், அளவிறந்த பெருங்கருணையோடு திருவோலக்கமா யெழுந்தருளியிருந்தனர்.

அப்போது உமாதேவியார் எழுந்து பரமபதியாகிய சிவபிரானைப் பணிந்துநின்று, "சுவாமீ! திரிலோகங்களிலேயும் இல்லறம் வழுவாது நடாத்தி முத்தியடைந்தவர்கள் உண்டோ? அதைத்திருவாய்மலர்ந்தருளல் வேண்டும்" என, சிவபெருமான் அருளிச்செய்கின்றனர். "உமையே! தெய்வலோகத்திலே வசிட்டர் அகத்தியர் அயன் புயங்கன் சம்பு என்கிற ஐவர்களும், பூலோகத்திலே திருவள்ளுவர் என்பவரும், தென்புலத்தார்கடன் தேவர்கடன் விருந்தோம்பல் சுற்றந்தழுவல் கபிலைபூசை செய்தல் முதலியன முடித்துக் கற்பின்வழுவாத நற்குண நற்செய்கைகளையுடைய மனைவிகளோ டிருந்து இல்லற தருமம் நடாத்தி முத்தியடைந்தனர்" என்று திருவாய்மலர்ந்தருள, பார்வதியார் "பூலோகத்திலே திருவள்ளுவர் என்பவர் யார்? அவர் சரித்திரத்தைக் கேட்க விரும்புகின்றேன்" என, சிவபிரான், பூர்வத்திலே ஒரு பிரளயம்வர அதைப் பிரமன் முன்னரேயறிந்து வேற்றுருவடைந்து, ஒரு சுரைக்கூட்டிற் புகுந்துநின்று; அவ்வெள்ளத்திலே மிதந்து வந்தனன். நாம் யாதும் அறியாதவன் போலச் சுரைக்கூட்டி னருகணைந்து, "இதற்குளிருப்



பவன் யாவன்?" என்று கேட்ப, தான் "வருங்காலமறிந்து நடத்தவல்ல வள்ளுவன்" என்றான். "இப்பிரளயத்தில் நீ எப்படி பிழைத்திருக்கின்றாய்" என்றோம், அப்போது பிரமன் நம்மை அறிந்துகொண்டு பேரானந்தத்தி லழுந்தி, "பரமபதியே! ஜகத்ரக்ஷகனே! உமது திருவருளினாலன்றோ பிழைத்திருக்கின்றேன், தேவரீர் கிருபைகூர்ந்து இத்துன்பமாகிய நீர்ப்பெருக்கைத் தவிர்க்க வேண்டும்" என்றுவேண்ட, அவ்வதிகாரத்தை உமக்கே தந்தோம் என்று சொல்லி முன்போலவே உலகத்தை அவராலேயே படைப்பித்

தோம்.

இப்படியிருக்கையில் ஆதிகாலத்தில் பூமியிலே பாண்டிநாட்டிலே மதுரைமா நகரத்திலிருந்த சங்கப்புலவர்கள் நம்மை ஓர்கால் அவமதித்ததின்பொருட்டு அவர்கள் கர்வ பங்கமாகும்படி பிரமனைத் திருவள்ளுவராகவும், மஹாவிஷ்ணுவை இடைக்காடராகவும், சரஸ்வதியை ஔவையாகவும் பூமியில் அவதரிக்கும்படி அனுப்பினோம்.

ஆதியிலே பிரம புத்திரர்களாகிய காசியப்முதலிய நவப்பிரமாக்களில் காசிபர் ஊர்வசியைச்சேர்ந்து வசிட்டரைப் பெற்றார். அவர் அருந்ததியைச்சேர்ந்து சத்தியரைப் பெற்றார். அவர் புங்கனூர்ப் புலைசியைச் சேர்ந்து பராசரரைப் பெற்றார். அவர் மச்சகந்தியைச் சேர்ந்து வியாசரைப் பெற்றார். இவர்கள் நால்வரும் வேதங்களுக் குரியவ ரானார்கள்.

பின்பு பிரமாவானவன் மற்றுஞ்சிலபுத்திரரால் வடமொழியையுந் தென்மொழியையும் விளங்கச்செய்ய வேண்டுமென்றெண்ணி வேதவிதிப்படி ஒரு யாகஞ்செய்ய, அதன்கண் வைத்திருந்த கும்பத்தினின்றுங் கலைமக ளவதரித்தனள். அவளைப் பிரமன் விவாகஞ் செய்துகொண்டான். பின்பு அகஸ்தியர் குறியவடிவோடு அக்கும்பத் துதித்தனர். அவர் சமுத்திர கன்னிகையை மணந்து சாகரன் என்பவரைப பெற்றார். அவர் திருவாரூர்ப் சினையைச்சேர்ந்து பகவன் என்பவரைப் பெற்று, அவருக்குச் சகல சாஸ்திரங்களையுங் கற்பித்தார். அந்நாளில் பிரம வம்சத்தில் தவமுனி என்பவர் அருண்மங்கை என்னும் பிராமணமாதைச் சேர்ந்து ஒரு புத்திரியைப் பெற்றுவைத்து விராலிமலையில் தவஞ்செய்யச் சென்றனர். அக்குழந்தையை உறையூர்ப் பெரும் பறையன் கண்டெடுத்துச் சிலகாலம் வளர்த்து வருகையில், அந்தச்சேரியில் அகாரணமாய் மண்மாரிபெய்து, மேல் நடக்கப்



போகிற காரணத்தினால் இந்தப் பெண் தவிர மற்றவர்கள் யாவரும் இறந்தனர். பின்பு அந்தப்பெண் எப்படியோ அதற்கடுத்த மேலூர்

அகாத்திலே நீதி யையன் வீட்டையடைந்து வளர்ந்து வந்தனள்.

அப்போது பகவனென்பவர் சகலசாஸ்திர பண்டிதராய்க் கண்டவர் யாவரும் மதிக்கும்படி பிராமண கிர்த்தியத்தில் வழுவாத வராய்க் காசியாத்திரைக் கேகும் மார்க்கத்திலே மேலூர் அகாத்தைக் கடுத்த ஒரு சத்திரத்திலிறங்கி நித்தியகர்மங்களை முடித்துக்கொண்டு சமையல் செய்துகொண்டிருந்தார். அவ்விடத்தில் அந்தப்பெண் வர, அவளைக் கண்டு "நீ யார்? புலைச்சியோ வலைச்சியோ இங்கே வந்தாய்" என்று அதட்டி மிகுந்த கோபங்கொண்டு சட்டுவத்தால் அவளது தலையிலே உதிரஞ்சோர அடித்து ஓட்டினர். அவள் அழுதுகொண்டே தன்னிடத்துக்குப் போய்விட்டாள்.

மறுபடியும் பகவனென்பவர் ஸ்நானஞ்செய்து போசனம் பண்ணி அதிசீக்கிரத்தில் வழிக்கொண்டு சிலநாளிற் காசிஸ்தல மடைந்து கங்காஸ்நானஞ்செய்து பிரயாகையிலிருந்து நீர்த்த மெடுத்துக்கொண்டு வருமபோது முன் தங்கிப்போன சத்திரத்தி லேயே வந்திறங்கினர். மேற்சொல்லிய பெண்ணானவள் அப்போது யௌவனமும் பேரழகும் உடையவளாய் அங்கேவந்தாள். பகவ னென்பவர் இவளுடைய சௌந்தரியமுதலிய குணங்களைப் பார்த்து மனமருண்டிருக்க, அங்ஙசந்திரந்த அதிபராகிய நீதியையர் அக்குறிப் பினைக்கண்டு "என் பெண்ணை நீர் விவாகம் பண்ணிக்கொண்டு இங் கேயே யிருக்கலாம்" என்று சொல்ல, அதற்கவர் "நான் கொண்டு வந்த கங்கையை இராமேசுரத்திற் செலுத்தித் திரும்பிவருவேன்" என்று உறுதிமொழி கூறி செலவு பெற்றுக்கொண்டுபோய், இராம லிங்கத்துக்கு அபிஷேகம்பண்ணித் திரும்பி வந்தார். அப்போது நீதியையர் பந்துமித்திரர்களோடிருந்து குறித்த கன்னிகையை பகவனுக்குப் பாணிக்கிரகணஞ் செய்துகொடுக்க, நாலுநாளைய சடங்குகள் சந்துஷ்டியாய் நடந்தேறின; ஐந்தாநாள் மங்களஸ்நா னஞ் செய்விக்கும்போது பகவனென்பவர் அந்தப்பெண்ணினுடைய

தலையில் எண்ணெயைப் பெய்யும்படி பயிரைவக்கிர்ந்தார், அப்போது தான் முன்பு சட்டுவத்தாலடித்த வடுவைக்கண்டு அனுமானித்து, "இந்தப் பெண் யார்" என வரலாறு முற்றும் விசாரித்து வியசனமடைந்து, "ஆதியளல்லவா?" என்று சொல்லிவிட்டு ஓடினர். அதுவே அவளுக்கு 'ஆதி' என்ற காரணப்பெயராயிற்று.

## திருவள்ளுவர் சரித்திரம்

அதுகண்டு ஆதி என்பவளும் பின்றொடர்ந்துசென்று, பொழுது போகையில் எதிரேகண்ட பாணர்சேரியில் ஒரு மண்டபத்திலே தங்கிய பகவனென்பவர் அருகிற்சென்று வணங்கிநின்று, "என் பர்த்தாவே! தெய்வச்செயலால் உமக்கும் எனக்கும் இந்தக்காரியம் நடந்திருக்க, சகலநீதியும் அறிந்த நீர் என்னைவிட்டு நீங்குதல் தகுமோ? அல்லது தருமமோ?" என்றும், "உம்மை நீங்கி நான் உயிர்தரிப்பேனோ? என்றும் மிகவும் இரக்கத்துடன் சொல்லப், பிராரத்த கர்மவசத்தால் இவர்புத்தியிலும் அதுசரியென்று பட்டுப் "பெண்ணே! என்னிடத்தில் உனக்கு அன்பிருக்குமானல் யான் சொன்னபடி கேட்கவேண்டும். அதாவது உனக்குப் பிள்ளைகள் எங்கெங்கே பிறக்கின்றனவோ அவைகளை அங்கங்கே அப்பொழுதே விட்டுவருவையானல் யான் உன்னைக் கூடச சம்மதிப்பேன்" என்றுசொல்ல, அவள் அதற்கு உடன்பட்டு, அன்றிரவில் அம் மண்டபத்தி லிருவருங் களித்திருந்தனர்

அப்போது நமது கட்டளைப்படி சரஸ்வதி யாவராலும் புகழப்பட்ட ஔவையாகப் பிறந்தனள். உடனே அவ்விருவரும் புறப்பட்டுப்போகையில தொண்டைநாட்டிலுள்ள ஊற்றுக்காட்டில் ஒரு மடத்திற்கூட உப்பையும், சோழதேசத்தில் கருவூரில் ஒரு சோலையிற்கூட அதிகமானும், காவிரிப்பூம் பட்டணத்தில் ஒரு மண்டபத்திற்கூட உறுவையும், திருவாரூரில ஒரு மடத்திற்கூடக் கபிலரும், வேளிமலைச சாரலிற்கூட வள்ளியம்மையும், திருமயிலாப்பூரில் இலுப்பைதோப்பிற்கூடத் திருவள்ளுவரும் பிறந்தனர்.

இக் குழந்தைகளை யாவர் காப்பாற்றுவாரென்று விட்டு நீங்கத்

தாய் வருந்தும்போது, அப்பிள்ளைகள் சொல்லிய தனி வெண் பாக்கள்:—

ஔவை

இட்டமுட னென்றலையி லின்னபடி யென்றெழுதி
விட்டசிவ னுஞ்செத்து விட்டானோ - முட்டமுட்டப்
பஞ்சமே யானாலும் பாரமவ னுக்கன்றாய்
நெஞ்சமே யஞ்சாதே நீ.

உப்பை

அத்தி முதலெறும்பீ றானவுயி ரத்தனைக்குஞ்
சித்த மகிழ்ந்தளிக்குந் தேசிகன் - முற்றாவே
கற்பித்தான் போனானோ காக்கக் கடனிலையோ
வற்பனோ வன்னை யான்.

திருவள்ளுவர் சரித்திரம் ௫

அதிகமான்

கருப்பைக்குண் முட்டைக்குங் கல்லினுட் டேரைக்கும்
விருப்புற் றமுதளிக்கு மெய்ய - னுருப்பெற்றா
லூட்டி வளர்க்கானோ வோகெடுவ யன்னாய்கேள்
வாட்ட முனக்கேன் மகிழ்.

உறுவை

சண்டப்பை யுள்ளுயிர்தன் றாயருந்தத் தானருந்து
மண்டத் துயிர்பிழைப்ப காசரிய - மண்டி
யலைகின்ற வன்னை யானுடைய வுண்மை
நிலைகண்டு நீயறிந்து நில்.

கபிலர்

கண்ணுமையாக் காட்டிற் கருங்கற் றவளைக்கு
முண்ணும் படியறிந் தூட்டுமவர் - நண்ணு
நமக்கும் படியளப்பார் நாரியோர் பாகர்

தமக்குந் தொழிலென்ன தான்

வள்ளியம்மை

அன்னை வயிற்றி லருத்தி வளர்க்கவன்று
னின்னும் வளர்க்கானோ வென்றுமே - பின்னரவஞ்
சூடும் பெருமான் சுடுகாட்டி னின்றுவினை
யாடும் பெருமா னவன்.

திருவள்ளுவர்

எவ்வுயிருங் காக்கவொரு வீசனுண்டோ வில்லையோ
அவ்வுயிரில் யானொருவ னல்லனோ - வவ்வி
யருகுவது கொண்டிங் கலைகுவதே னன்னே
வருகுவது தானே வரும்.

இதுகேட்டுத் தாய் மனந்துணிந்து நீங்க, அவ்விருவருந் தீர்த்த யாத்திரார்த்தமாகச் சென்றனர்.

திருமயிலாப்பூரில் விடப்பட்ட குழந்தை அங்குள்ள ஆலயத்தில் நம்மை ஆத்மார்த்தமாகப் பூசித்துக்கொண்டு, இலுப்பை மரத் தடியிலிருந்து அம்மலரிற்றுளிக்குந் தேனையுண்டு, பூர்வம் பிர்மாவாதலால் சிகை எக்யோபவீதம் சதுர்வேத புத்தகமுங் கொண்டு வளர்ந்துவருகையில், ஒரு வேளாளன்மனைவி புத்திர



பாக்கியத்தைக்குறித்து மேற்படி ஆலயத்திலோர்புறம் தவஞ்செய்திருந்தனள். அப்போது 'இக்குழந்தையை நீ யெடுத்துக்கொண்டு போய்த் திருவள்ளுவரென்று நாமகரணஞ் செய்' என்று நம்மால் அசரீரி வாக்குண்டானதை அவள் கேட்டு மனமகிழ்ச்சியுடன் அக்குழந்தையை எடுத்துக்கொண்டுபோய்க் கணவன்கையிற் கொடுக்க, அவனும் இருகையேந்தி வாங்கித் தன் மடிமேலிருத்தி உச்சிமோந்து, இருவரும் அருமையாக வளர்த்து வந்தனர். அது கண்ட அவர்கள் சுற்றத்தார் "ஏதோ ஒருபிள்ளையை வளர்க்கிறார்கள்" என்று இகழ்ச்சி செய்ய, அதற்கவர்களஞ்சிப் புறத்திலுள்ள தொழுவத்தில் தொட்டிலிட்டு அதில் அக்குழந்தையைக் கிடத்திப் பண்ணைக்காரரைக் காவல்வைத்து வளர்த்து வந்தார்கள்.

ஐந்துவயதான பின்பு திருவள்ளுவரும் தம்மை வளர்ப்பவர் சுற்றத்தார்களால் நிந்தைசெய்யப் படுகிறார்களோ என்று அவர்களைப்பார்த்து "என்னால் உங்களுக்கு வருத்தம் வேண்டுவதில்லை, இனி நான் வேறிடத்திலிருந்து நீங்கள் நினைக்கும்போது வந்து வேண்டியதைச் செய்வேன்" என்று சொல்லிப் புறப்பட்டு அவ்வூரில் ஒரு பனைமரத்தினிழலில் இருந்தார் அம்மரத்தடி நிழல் அவரைவிட்டு நீங்காதிருக்க, அதைக் கண்டவர்களெல்லாம் "இப்பிள்ளை தேவனோ, முனிவனோ, இவ்வருக்கொண்டு வந்தது" என்று துதிக்க, நாயனார் அவ்விடம்விட்டுத் திருமூலர், போகர் முதலாகிய சித்தர்கள் வாசஞ்செய்யும் மலைக்கெழுந்தருளினார். அங்கிருந்த திருமூல ரிவரைக்கண்டு "வள்ளுவரே! பூர்வத்திலுந்தி மனைக் கனுக்கிரகம் பண்ணினபோது அங்கிருந்தீரே? உலகத்தாருக்கும் சித்திமுத்தி வருளும்படிக்கும், அறம், பொருள், இன்பம் என்னும் முப்பாலையுந் தமிழில் அருளிச்செய்யும்படிக்கும் இங்குவந்தவதரித்தீரோ?" என்று துதிக்க, நாயனார் மகிழ்ந்து அங்குத் தவஞ்செய்வோரில் ஒருவராகத் தாமுமிருந்தனர்.

அக்காலத்தில் தொண்டைமண்டலத்தில் ஒரு வேதாளமானது பயிர்களை அழித்தும், உயிர்களை வதைத்தும், அநேக துன்பங்களைச் செய்து வருகையில், காவேரிப்பாக்கமென்னும் ஊரிலிருக்கும் ஆயிரம் ஏர்வைத்துப் பயிர்த்தொழில் நடாத்தும் மார்க்கசகாயனென்னும் வேளாளன் அதை யடக்கினவருக்கு வேண்டிய திரவியமும் ஒருகும் தருகிறேனென்று பிரசித்தப்படுத்தியிருந்தான். அதை யடக்க ஒருவராலும் முடியாதிருக்கமையால் அவ்வேளாளன் பெரியோர்கள் வாசஞ்செய்யும் மலையிலவந்து திருமூலர் முதலானவர்க



ளுடன் சொல்ல, அவர்கள் "அதோயிருக்கும் திருவள்ளுவருடன் சொல்" என்றார்கள். அதையறிந்து சிவகாருண்யராகிய நாயனார் அவ்வேதாளத்தை ஸ்ரீ பஞ்சாக்ஷர மந்திரத்தால் வென்று யாவரையுங் காத்தனர்.

அதுகண்டு அவ்வேளாளன் நாயனாரைத் துதித்துத் "தான் கொடுக்கும் ஊரையும் திரவியங்களையும் பெற்றுக்கொண்டு, வாசுகி யென்னுந் தனபெண்ணையுந் தேவரீர் அங்கீகரித் தருளவேண்டும்" என்று பிரார்த்தித்தான். நாயனார் உலகோருக்கு இல்லறம் நடத்திக் காட்டவேண்டிய காரணத்தை யோசித்து "அந்தப்பெண் நான் கொடுக்கும் மணலை அன்னமாக்கி எனக்குப் படைக்குமானால் அப்படியே விவாகஞ்செய்து கொள்ளுவோம்" என்றார். அந்தப் பெண் சம்மதித்து அவர் கொடுத்த மணலைச்சமைத்துப் படைத்தனள். பின்பு நாயனார் வாசுகி என்பவளை விதிப்படி விவாகஞ் செய்து கொண்டு, சிலநாளங்கிருந்து திருமயிலைக்கு மனைவியுடன் வந்து ஓர் இல் ஆக்கிக்கொண்டு செய்தொழில்களில் பாவமில்லாதது நெய்தற் றொழில என்று நிச்சயித்து, அவ்வூரிலிருக்கும் ஏலேலசிங்கனென்னும் வர்த்தகரிடத்தில் நூல்வாங்கி ஆடைநெய்து அதனால்வருங் கூலியால் காலங்கழித்திருந்தனர்

அக்காலத்தில் திருவாலங்காட்டில் சபாநாயகராக எழுந்தருளியிருக்கும் நாம் மகிஷாசுர சங்காரஞ்செய்து கர்வித்திருந்த பத்திரகாளியுடன் பலவிதநடனம் புரிகையில் காளியும் சோர்வுறாமல் நடனமிட, அப்போது நமது குண்டலம் கழன்றதைக் காதில் சேர்க்கும்படி ஊர்த்துவபாதமாக நடனஞ் செய்தோம், அப்படி பத்திரகாளியும் நாணி நின்றனள் அதுகண்டு தேவர்கள் சந்தேகமுற்றுத் தற்செயலாய் ஊர்த்துவ நடனஞ்செய்த காரணந் தெரியாது மயங்க, அப்போது நீங்கள் திருமயிலையிலிருக்குந் திருவள்ளுவரால் தெரிந்துகொள்ளுங்களென்று ஆக்ஞாபித்தோம் தேவர்களங்கே போய் அவர் முன்னிற்கையில், அக்குறிப்பறிந்து நாயனார் சொல்லியது:—

வெண்பா.

பூவி லயனும் புரந்தரனும் பூவுலகைத்
தாவி யளந்தோனுந் தாமிருக்க - நாவி
னிழைநக்கி நூனெருடு மேழையறி வேனோ
குழைநக்கும் பிஞ்ஞகன்றன் கூத்து.

என்கிற வாக்கியத்தைக் கேட்டுத் தங்கள் சந்தேகந் தெளிந்தார்கள்.

ஒருநாள் நாயனார் நூல் வாங்கும்பொருட்டு ஏலேலசிங்கர் வீட்டுக்குப்போய்ச் "செட்டியார் எங்கே?" என்றுகேட்க, "சிவபூசைசெய்கிறார்" என, "அவர் சிவபூசை இங்குச்செய்கிறாரோ குப்பத்தில் செய்கிறாரோ" என்று சொல்ல, அதை அவர்பத்தினி உள்ளேபோய்ச் செட்டியாருக்குச் சொல்ல, செட்டியார் திடுக்கிட்டுச் சிவபூசைவிட்டு ஓடிவந்து நாயனாருடைய உபயசரணங்களை வணங்கி, "சுவாமீ! அடியேனைப் பந்தாகாரத்தினின்றும் எடுத்துக் கரையேற்றியருளல் வேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்தனர். பின்பு ஒருநாள் நாயனார் அவரது பக்குவத்தையும் மற்றுஞ் சில மாணாக்கர் பக்குவத்தையும் சோதிக்கவெண்ணி அவர்களை யழைத்துக்கொண்டு ஒரு வனத்திற்செல்ல, அங்குப் பெருகிவரும் வெள்ளத்தில் தம்மைப் பின்றொடர மனோதிடமற்றவராய்ச் சில மாணாக்கர்கள் பயந்து நின்றுவிட, ஏலேல சிங்கர் மாத்திரம் தம்மைத் தொடர்ந்துவந்தனர், அவ்வெள்ளம் வழிவிட்டது. பின்பு நாயனார் ஏலேல சிங்கரைப்பார்த்து ஓர் உயர்ந்த மரத்தினுச்சியி லேறும்படிசொல்ல, அவர் ஏறியபின்பு "நின்ற கொம்பையும் பிடித்தகொம்பையும் விட்டுவிடு" என்றுசொல்ல, அவ்வாறே யோசியாமல் விட்டனர். விட்டும் ஓர் அபாயமுமில்லாம லிருக்கக்கண்டு ஏலேலசிங்கரை நாயனார் தமது மடிமீதுவைத்து ஞானோபதேசஞ் செய்தருளினர். பின்பு திருமயிலை நாட்டுக்கரசனாகிய அரசுகராஜன் ஒருநாள் ஏலேலசிங்கரோடு பேசிக்கொண்டிருக்கையில் "உமக்குப் புத்திரப்பேறில்லையே, உமது ஞானாசாரியரைக் கேட்கலாகாதா" என்ன, அவர் "நல்லது" என்று போய் நாயனாரைக்கண்டு விண்ணப்பஞ் செய்ய, நாயனார் "சுவாமி கடாக்ஷிப்பார்" என்று அனுக்கிரகம் பண்ணினர்.

பின்பு ஒருநாள் ஏலேலசிங்கரும அவர் மனைவியும் வழக்கப் படி காவிரியில் தரிசிக்கும் பசுவின் வாற்புறத்தில் காம் பிறுதழுவி யாய் இருந் கழுவதைக்கண்டு அவர்கள் எடுத்து உச்சிமோந்து முத்தமிட்டு ஆனந்தசாகரத்தி லழுந்தி ஞானகுருவாகிய நாயனர் சந்நிதிக்குக்கொண்டுபோய் வைத்து வணங்கினர்கள். அவர் அக் குழந்தைக்கு "அழகானந்தர்" என்று நாமகரணஞ்செய் தனுப் பினர். இச்செய்தியை ஏலேலசிங்கர் அச்சுதராஜனுக் கறிவிக்க, அவன் "அப்படித் தெய்விகமாய்க் கிடைத்திருந்தால் அக்



குழந்தை இங்கு வரலாமே" என்றான். உடனே அரசனது மடியில் குழந்தை வந்திருந்தது. அது கண்டு ஆச்சரியமடைந்து "இது அழகானந்தமோ" என்று ஆனந்தமடைந்து தன் மனைவிகையிற் கொடுக்க, அவளும் ஆனந்தமடைந்து அருமையாக வளர்த்துவந் தனள். பின்பு நாயனார் அவர்களுக்கு ஞானோபதேசஞ் செய்து கொண்டு அதிகமகிமையோடு வாழ்ந்திருந்தனர்.

மற்றொருதினத்தில் ஏலேலசிங்கரது கப்பல கரைதட்டிப் போக, அதை அரசனுக்குச்சொல்ல, அவன் "உம்முடைய ஆசி ரியருடனே சொல்லும்" என்ன, அதை முன்னமேயறிந்து நாய னார் தமது திருமுன் விண்ணப்பஞ் செய்யவருகின்ற ஏலேலசிங் கரை யழைத்துக்கொண்டு கப்ப லருகிற்சென்று தமது திருக் கரங்களால் அதைத்தொட்டு "ஏலேலோ வென் றிழுங்கள்" என்று கட்டளையிட்டபடி யிழுக்க வுடனே கப்பல் சரியாக நின்றது.

பின்பொருகாலம் மழையில்லாமல் தானியம் கொள்ளக் கிடையாமல் அநேகர் இறந்துபோவதைக் கண்டு சிவகாருண்யராகிய நாயனார் தமக்கன்புள்ள ஏலேலசிங்கரைப்பார்த்து "நீர் இந்தப்பஞ்சம் மாறுகிறவரைக்கும் வாங்கிவைத்திருக்கும் நெல்லையெல்லாம் வாங்கின விலைக்குக் குறுணி யேற்றமாக விற்கக்கடவை" என்றருள, அவ்வாறே குருமொழிதவறாது விற்றனர். பொருள் மலைபோற் குவிந்தன. கட்டியிருந்த நெற்கூடோ குறையாமலேயிருந்தது. பின்பு மழைபெய்து உலகம் செழிப்படைந்தது. மறுபடியும் நாயனார் ஏலேலசிங்கரை நோக்கி "குறுணி குறையவில்" என்றார். அவ்விதமாகவே விற்க மறுநாளைக்குள் அவரிடத்திலிருந்த நெல்லெல்லாம் செலவாய்விட்டன.

நாயனார் ஏலேலசிங்கரைப் பார்த்து "நீ நெல்லு விற்று விருத்தியாயிருக்கிற பொருள்களை உருக்கித் திரட்டிக் கடலிற் போட்டுவிடு" என்ன, அவர் அப்படியே செய்தனர். அதை யொருமீன் விழுங்கிற்று. சிலநாள்சென்றபின் அம்மீன் வலைகாரர்கையிலகப்பட, அவர்கள் அதைச் சேதிக்கையில் அதன்வயிற்றில மலினம்படிந்த வொருதம்ப மிருக்கக்கண்டு அதிசயித்து, அதை ஏலேலசிங்கருக்குக் கொடுத்தார்கள். அவர் கல்லென்று நினைத்து ஸ்நானம்செய்யுமிடத்திற் போடுவித்தார். அதனமேல் நடத்தல்முதலிய பயிற்சியால் மலினம்நீங்கி அது பிரகாசித்தது. அதில் தமதுபேர் வெட்டியிருக்கக்கண்டு "இது குருவருள்" என்று மகிழ்ச்சியடைந்தார்.

40

## திருவள்ளுவர் சரித்திரம்

இப்படி அநேக அற்புதங்களைச் செய்துகொண் டிருக்கும் காலையிலே, பாண்டிநாட்டிலே மதுரையில் நக்கீராதியாய சங்கப் புலவர்கள் தாம் அடைந்திருந்த கல்விப்பெருக்கால் கர்வ

மடைந்த அங்குப்போந்த வித்துவசிரோன்மணிகளை எல்லாம் அவமதித்து நடப்பதைக் கேள்வியுற்றிருந்த அழகானந்தர் முத லிய பெரியோர்கள் திருவள்ளுவரைப்பார்த்து, கற்றற் கெளிதாக வும் இம்மையாதி மும்மைக்கும் உதவியாகவும், உலோகோபகார மாகவும் உமதுபெயரால் ஒருநூல் செய்யவேண்டுமென்று வேண்ட, நாயனுர் வேதாகமசாரங்களைத் திரட்டி அறம், பொருள், இன்பம் என முப்பாலாக்கி (கஙக0) குறள் வெண்பாவாற் பாடினர். அழகானந்தர் முதலாயினோ அதைக்கண்டு சந்தோஷித்து இதைக் கொண்டு சங்கத்தாரை ஜயிக்கலாம் மன்று துணிந்து, நாயனு ருக்குத் தங்கள் எண்ணத்தைத் தெரிவித்தனர். நாயனுர் அடியார் வேண்டுகோளுக்கிசைந்து தமது மனைவியை இல்லின்க ணிறுத்திப் புறப்பட்டு இடைக்கழிநாட்டின் வழியாகப் போகை யில், ஔவை நேர்பட, அவரோடும் இடைக்காடரைக்கண்டு தாஞ் செல்லுங் காரணத்தைத் தெரிவிக்க, இடைக்காடரும் நாயனுரை நோக்கி "இடையாலுங் கடையாலு மழியக்கடவதென்று சுவாமி தம்மை நிராகரித்த நக்கீராதி சங்கப்புலவரைச் சபித்திருக்கின்ற னர், ஆதலால் என்னாலும் உம்மாலு மசசங்க மழிவுபடப்போகிற தாகையால் நாமும் உம்முடன் வருவோம்" என மூவரும் சென்று மதுரையை அடைந்து வையைநதியில ஸ்நானஞ்செய்து செபதபங் களை முடித்துக்கொண்டு பிரதக்ஷிணமாக ஆலயத்திற்குட்சென்று அங்கு மீனுக்ஷி சொக்கலிங்க மூர்த்தமாகி அமர்ந்த நம்மைத் தரி சனஞ் செய்தனர். பின்பு மேற்படி சந்நிதானத்தில் பாண்டிய ராஜன் மந்திரி பிரதானி முதலானவர்கள் சூழ, ஔவை இடைக் காடர் மற்றமுள்ளவர்களுமிருந்து கேட்கும்படி தாமருளிய திருக் குறள் முப்பாலையும், சங்கத்தார் நெஞ்சில் திகிலேறவும், ஏனையர் நெஞ்சிற் களிப்பேறவும், திருவள்ளுவர் அரங்கேற்றி முடித்தனர். அதனைச் செவியாரக் கேட்ட இராஜன் முதலானவர்களும் மிகுந்த ஆனந்தபரவசராய் நாயனுரைப்புகழ்ந்து துதித்தனர்.

அதன்பின்பு நாயனுர், இடைக்காடர், ஔவை முதலானவர் கள் தம்மைச் சூழ்ந்துவரப் பொற்றாமரைத் தீர்த்தத்தின்கண்ணே

சங்கப்பலகைமீது தமிழ்க்காசாக வீற்றிருக்கின்றவர்களும், திரு வாதவூரடிகளாகிய மாணிக்கவாசகர் பாடிய திருக்கோவையார்



க்கு நூற்றுக்கும் நூறு குற்றங் கூறினவர்களும், நம தன்பனாகிய தருமி என்னும் பிராமணனுக்குப் பொற்கிழி கொடுத்தற்பொருட்டு அருளிச்செய்த,

அகவல்.

கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின்
மயிலியற் செறியெயிற் றரிவை கூந்தலி
னறியவு முளவோ நீயறியும் பூவே

என்னு திருமுகப் பாசுரத்திற்குக் குற்றங் கூறினதினால் நாம் ஒரு வித்துவானாக அப்புலவர் சபைக்கேகி நக்கீரனைப்பார்த்து,

வெண்பா

அங்கங் குலைய வரிவாளி னெய்பூசிப்
பங்கம் படவிரண்டு கால்பரப்பிச் - சங்கதனைக்
கீர்கீ ரெனவறுக்குங் கீரனோ வென்கவியை
யாராயு முள்ளத் தவன்.

என்று கேட்டபோது, நக்கீரன் நம்மை யறிந்துகொண்டு,

வெண்பா

சங்கறுப்ப தெங்கள் குலஞ் சங்கரனார்க் கேதுகுலம்
பங்கமுறச் சொன்னாற் பழுதாமே - சங்கை
யரிந்துண்டு வாழ்வோ மரனே யினைப்போல
விரந்துண்டு வாழ்வ தில்லை

என்று சொல்ல, நாம் நமது நெற்றிக்கண்ணைக்காட்ட, அப்போதும்

அஞ்சாமல் நெற்றிக்கண்ணையன்று உடம்பெல்லாங் கண்ணைக் காட்டினுங் குற்றங் குற்றமேயென்று கூறினவர்களும், மற்றப் புலவர் பட்டியெல்லாம் கொள்ளையிட்டவர்களும், பழுதற இலக்கண விலக்கிய வாராய்ச்சியுள்ளவர்களுமாகிய நக்கீரராதிப புலவர்களுடைய தைரியமும் தருக்கும் அறிவுங் கலங்கிச் சோர்வடையும்படி அவர்களிடத்திற் சென்று, அவர்கள் தம்மைவினவின அசதி வினாக்களுக்கெல்லாம் செந்தமிழ்ப்பாவா லுத்தரங் கொடுத்தனர். பின்பு சங்கத்தார் காயனாரை நீ யெந்தவூரென்றார்கள் ; அதற்கவர்,

எந்தவூ ரென்றீ ரிருந்தவூர் நீர்கேளீர்
சந்தவூர் செய்தி யறியீரோ - வந்தவூர்

## திருவள்ளுவர் சரித்திரம்

முப்பாலும் பாழாய் முடிவிலொரு சூனியமா
யப்பாலும் பாழா யறும்

என்பது முதலான ஞானார்த்தமான செய்யுட்களால் அவர் வினவிய வினாக்களுக்கெல்லாம் உத்தரங் கொடுத்தனர். பின்பு சங்கத்தாரை நோக்கி ஒளவை கைச்சைகையா "இவை என்ன?" என்று வினவிய வினாக்களுக்கு அவர்கள்,

இவ்வளவு கண்ணினா ளிவ்வளவு சிற்றிடையா
ளிவ்வளவு போன்ற விளமுலையா - ளிவ்வளவாய்க்
காமத் தலைவனையுங் காணாது கன்றினா
ளாமத்தை நாட்டுகுறி நன்கு

என்று விடைகூற, இஃது தகுதியான உத்தரவன்றென்று அக்குறிகளுக்கு ஒளவை,

ஐய மிடுமி னறநெறியைக் கைப்பிடிமி
னிவ்வளவே னும்மனத்தை யிட்டுண்மின் - றெய்வ
மொருவனே யென்ன வுணரவல் லீரே
லருவினைக ளைந்து மறும்.

என்று மொழிந்ததைக்கேட்டுச் சங்கத்தார் திகிலடைந்து இவரை

வெல்லப்படாதென்று துணிந்து இடைக்காருடனே பேச, அவர்

ஆற்றங் கரையி னருகிருந்த மாமரத்திற்
காக்கை யிருந்து கஃகஃகெனக் - காக்கைதனை
எய்யக்கோ லில்லாம லிச்சிச் செனவெய்தான்
வையக்கோ னார்தம் மகன்.

என்று கூறிய இதுபோன்ற செய்யுட்களுக்கு உத்தரங்கொடுக்கச் சக்தியில்லாமல இவர்களை வெல்வ தரிதென்றறிந்து நாணமுற்றுச் சங்கத்தார் நாயனாரைப்பார்த்து "நீர்பாடிய குறளை நாங்க ளொப்புக் கொள்ளுவதற்கு ஐயமொன்றுளது அஃதியாதெனின், நாங்களிருக்கு மிந்தப்பலகை தெள்ளிய செந்தமிழ்நூலைக் கண்டால் இடங்கொடுக்கு மாதலால், இது ஒப்புக்கொள்ளுமாகில் எங்களுக்கெல்லாம் சம்மதம்" என்று சொல்ல, அவ்வாறே நாயனார் தாமியற்றிய திருக்குறளை அச்சங்கப்பலகைமீது வைத்தனர். உடனே அப்பலகை தன்னிடத்திருந்த சங்கத்தார் யாவரும் பொற்றாமரையில் விழும்படி, தெய்வத்தன்மை பொருந்திய திருக்குறட் புத்தகத்தினளவாகச்சுருங்கி அதற்குமாத்திரம் இடங்கொடுத்தது. அதைக் கண்டவர் யாவரும் களிகூர்ந்தனர். அவருட்சிலர், இதுவே தமிழ்



வேதமென்றும், ஆகமமென்றும், சாஸ்திரமென்றும், மதனநூலென்றும் பலவாறாகச் சொல்லித் துதித்தனர் பின்பு பொற்றாமரையில் விழுந்து தடுமாறி வருந்திய சங்கப்புலவர் நாற்பத்தொன்பதின்மருங் கரையேறி நாயனாரையும் திருக்குறளையும் புகழ்ந்து நாற்பத்தொன்பது வெண்பாப் பாடினர். அஃது திருவள்ளுவ மாலை எனப் பெயர்பெறும்.

மேற்படி சங்கத்தாரும் உக்கிரப்பெருவழுதி என்னும் பாண்டியன் முதலானவர்களும் நாயனாரைத் துதித்து "இந்நூலை அகஸ்தியரும் ஒப்புக்கொளில் நல்லது" என, அதற்கு நாயனார் சம்மதித்துப் பொதியமலைப் போய் அகஸ்தியா முதலிய முனிவர்களைக்

கண்டு தாஞ்செய்த நூலைக் காண்பிக்க, அவர்கள் அதை நன்குணர்ந்து அடைந்த சந்தோஷம் அனந்தனுலுஞ் சொல்லமுடியாது. அவ்விடத்தில் கொங்கணசித்தர் தம்மை வழிபட நாயனர் அவருக்கனுக்கிரகித்து, அவ்விடமிருந்து மற்ற நாமெழுந்தருளியிருக்கும் ஸ்தலங்களையெல்லாந் தரிசனஞ்செய்துகொண்டு திருமயிலைக்குச் சமீபமாக வருகையில், அப்பதியாருர் ஏலேலசிங்கருங் கேள்விப்பட்டு எதிர்கொண்டழைத்துவர, நாயனரும் தமதில்லஞ்சேர்ந்து வாசுகியாதியோடு களித்திருந்தனர்.

இங்ஙன மிருக்கையில ஒருவர் அவரில்லின்கட்சென்று இல்லறம் பெரிதோ துறவறம்பெரிதோ அடியேனுக் கனுக்கிரகஞ் செய்யவேண்டுமென்று பலநாள் காத்திருக்க, நாயனர் உத்தரமொன்றுஞ் சொல்லாமல அவரை யறிந்துபோகும்படி, ஒருநாள் தமது மனையாள் கிணற்றில சலந்தூக்கிக்கொண் டிருக்கையில் அழைக்கப் பாதிக்கிணற்றளவில் தூக்கின குடத்தை விற்க விட்டு வந்ததையும், ஒருநாள் அந்த அம்மாள் நாயகருக்குப் பழையது பரிமாறிநிற்கையில், "இதுசுடுகின்றது" எனச் சீக்கிரத்தில் விசிறிகொண்டு விசிறியதையும், மற்றொருநாள் பகலில் நாயனர் நெய்யும்போது கையிலிருந்த குழல் தவறி வீழ்ந்ததை யெடுக்க மனையாளைத் "தீபங் கொண்டுவா" எனக் கொண்டுவந்ததையும், வந்திருந்தவர் கண்டு கற்புடைய மனையாள் வாய்க்கில் இல்லறமே பெரிது, இல்லையேல் துறவறமே பெரிது என் றெண்ணிக்கொண்டு நாயனரை வணங்கிப் போய்விட்டனர்.

இவ்வாறு யாவருங்காண நாயனருந் தம்மனைவியாரும் அருமையாக இல்லற நடாத்திவருங் காலத்தில் வாசுகியம்மாள் முத்திதுடையும்போது நாயனர் திருமுகத்தைப்பார்க்க, நாயனர் "யாது



விரும்புகின்றாய்" என, அம்மையார், "என்னை மணஞ்செய்தவன்று

தொடங்கித் தேவரீருக்கு அன்னம் பரிமாறுகையில் சிறுபாத்திரத்தில் சலமும் ஊசியும் சமீபத்தில் வையென்று கட்டளையிட்டதின் காரணம் இன்று வரையில் அடியேற்குத் தெரியவில்லை" என்று விண்ணப்பஞ்செய்ய, நாயனார் "அன்னம் புறத்திற் சிதறுமாயின் அதையெடுத்துப் பரிசுத்தஞ் செய்வதற்கு" என்று சொல்ல, அதைக் கேட்டு உடனே முத்தியடைந்தனர். அப்போது நாயனார்,

அடிசிற் கினியாளே யன்புடை யாளே
படிசொற் றவறாத பாவா - யடிவருடிப்
பின்றூங்கி முன்னெழூஉம் பேதையே போதியோ
வென்றூங்கு மென்க ணிரா.

என்றுரைத்து அந்த அம்மாள் திருமேனியைச் சமாதிபண்ணினார். பின்பு மகாவற்புதங்களைச் செய்துகொண்டிருந்து ஏலேலசிங்கர் முதலிய சிடர்களுக்குப் பூரணானுக்கிரகஞ் செய்து ஏலேலசிங்கரைப் பார்த்து நமக்குப் பரிபூரணதிசை நேரிட்டிருப்பதால் நமது சரீரத்தைப் புரிகட்டி இழுத் தூர்க்குப் புறத்திற் போட்டுவிடுமென்றுகட்டளையிட்டு நிஷ்டைகூடிப் பரிபூரணமானவர்போலிருக்கக்கண்டு, ஏலேலசிங்கர் பொற்பெட்டியில்வைத் தடக்கஞ்செய்ய வெத்தனித்ததையறிந்து நாயனார் கண்விழித்துப்பார்த்து, "அப்பா! நான் சொன்னசொல்லைக் கடவாதே" என்று சொல்லி உடனே விதேகமுத்தி யடைந்தனர். ஏலேலசிங்கர் நாயனார் கட்டளையை நிறைவேற்றுகையில் அவரது சரீரப பரிசமடைந்த செந்துக்கள் எல்லாம் பொன்னிறமடைந்து சுவர்க்கம் பெற்றன" என்று உமாதேவியாருக்குப் பரம கிருபாநிதியாகிய சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளினர்.

திருவள்ளுவர் சரித்திரம் முற்றிற்று



உ

கடவுள் துணை

# திருக்குறள்

# பாலியலதிகார அடைவு

## க-வது அறத்துப்பால்

C



திருக்குறள் பாலியலதிகார அடைவு

# உ-வது பொருட்பால்

## ௩-வது காமத்துப்பால்



உ

கடவுள் துணை.

# திருவள்ளுவர் குறள்

## மூலமும் - உரையும்.

# அறத்துப் பால்.



### உரைப்பாயிரம்.

இந்திரன் முதலிய இறையவர் பதங்களும் அந்தமி லின்ப வீடும் நெறி யறிந்து எய்துதற்குரிய மாந்தர்க்கு உறுதியென உய னெடுக்கப்பட்ட பொருள் நான்கு: அவை அறம், பொருள், இன்பவ் பன. அவற்றுள் வீடென்பது சிந்தையு மொழியுஞ் செல்லா தாகலின், துறவறமாகிய காரண வகையாற் கூறப்படுவதல்லது வகையால் கூறப்படாமையின், நூல்களாற் கூறப்படுவன ஏனை யாம்.

அவற்றுள், அறமாவது மனுமுதலிய நூல்களில் விதித்தன விலக்கியன வொழிதலுமாம். அஃது ஒழுக்கம், வழக்கு, தண்டமென வகைப்படும்.

அவற்றுள், ஒழுக்கமாவது அந்தணர் முதலிய வருணத்தார் விதிக்கப்பட்ட பிரமசரிய முதலிய நிலைகளினின்று அவ்வவற்றிற் அறங்களில் வழுவா தொழுகுதல்.

வழக்காவது ஒரு பொருளைத் தனித்தனியே யெனதெனதென் பார் அதுகாரணமாகத் தம்முண் மாறுபட்டு அப்பொருண்மேற் செ அது கடன் கோடன் முதலிய * பதினெட்டுப் பதத்ததாம்.

* பதினெண் வியவகார பதங்களாவன:—கடன் கோடல், அடைக்கலமா

டுத்துவைத்த பொருள், உடையனல்லான் விற்றல், கூடி மேம்படல், நல்வெதை — கூலி கொடாமை, கட்டுப்பாடு கடத்தல், விற்றுக்கொண்டு ஒப்பாமை, ஆண்டிற் வழக்கு, எல்லை வழக்கு, கருந்தண்டம், கடுஞ்சொல், களவு. வன் செய்கை, ..டு வ்வுதல், மாதராடவர் முறை, தாய பாகம், சூது என்பன,—மநு நூல்—அ, யாயங்கள்,

## உரையபாயிரம

ண்டமாவ தவ்வொழுக்க நெறியினும் வழக்கு நெறியினும் வழீஇயி அந்நெறி நிறுத்துதற்பொருட்டு * ஒப்பநாடி அதற்குத்தக வொறுத்தல் இவற்றுள் வழக்குந் தண்டமு முலகநெறி நிறுத்தற் பயத்தவாவதல்லது ம்போல மக்களுயிர்க் குறுதி பயத்தற் சிறப்பில வாகலானும், அவை ானேயன்றி யுணர்வு மிகுதியானுந் தேயவியற்கையானு மறியப் அவற்றையொழித்து, ஈண்டுந் தெய்வப் புலமைத் திருவள்ளுவ புடைய வொழுக்கமே அறமென எடுத்துக் கொள்ளப்பட்டது தான் நால்வகை நிலைமைத்தாய் வருணந்தோறும் வேறுபாடுடைமை ான்மையாகிய சிறப்பியல்புகளொழித் தெல்லார்க்கு மொத்தலிற் ன்மையாகிய பொதுவியல்பு பற்றி இல்லறந் துறவறமென இரு பாற் கூறப்பட்டது.

ற்றுள், இல்லறமாவது இல்வாழ்க்கை நிலைக்குச் சொல்லுகின்ற ணின்று அதற்குத் துணையாகிய கற்புடைய மனைவியோடுஞ் செய் ாகலின், அதனைமுதற்கட் கூறுவான் தொடங்கி, எடுத்துக்கொண்ட இனிது முடிதற்பொருட்டுக் கடவுள் வாழ்த்துக் கூறுகின்றார்.



---

* மெய்கண்ட திவாகரனி, ஒப்ப நாடி யத்தக வொறுத்தி'' என்பது

# பாயிரம்.

## கடவுள் வாழ்த்து—முதல் அதிகாரம்.

அஃதாவது, கவி தான் வழிபடு கடவுளையாதல் எடுத்துக்கொண்ட பொருட் கேற்புடைக் கடவுளையாதல் வாழ்த்துதல். அவற்றுள் இவ்வாழ்த்து ஏற்புடைக் கடவுளை யென அறிக. என்னை? சத்துவமுதலிய குணங்களான் மூன்றாகிய உறுதிப்பொருட்கு அவற்றான் மூவராகிய முதற்கடவுளோடு இயை புண்டாகலான். அம்மூன்று பொருளையுங் கூறலுற்றார்க்கு அம்மூவரையும் வாழ்த்துதல் முறைமையாகலின், இவ்வாழ்த்து அம்மூவர்க்கும் பொதுப்படக் கூறினாரென வுணர்க.

௧. அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

(பரிமேலழகருரை.) என்பது,—அகரமாகிய முதலையுடைய எழுத்துக்களெல்லாம்; அதுபோல, ஆதிபகவனாகிய முதலையுடைத்துலகு, என்றவாறு.

இது தலைமைபற்றிவந்த எடுத்துக்காட்டுவமை. அகரத்திற்குத் தலைமை விகாரத்தானன்றி நாதமாத்திரையான வியல்பாற் பிறத்தலானும், ஆதிபகவற்குத் தலைமை செயற்கை யுணர்வானன்றி இயற்கை யுணர்வான் முற்று முணர்தலானுங் கொள்க. தமிழெழுத்திற்கேயன்றி வடவெழுத்துக்கு முதலாத லுநோக்கி எழுத்தெல்லா மென்றார். ஆதிபகவனென்னு மிருபெயரொட்டுப் பண்புத்தொகை வடநூன்முடிபு. உலகென்றது ஈண்டுயிர் கண்மே னின்றது. காணப்பட்ட வுலகாற் காணப்படாத கடவுட்கு உண்மை கூறவேண்டுதலின், ஆதிபகவன் முதற்றே யென வுலகின்மேல் வைத்துக் கூறினார்; கூறினாரேனும், உலகிற்கு முதல் * ஆதிபகவனென்பது கருத்தாகக் கொள்க. ஏகாரந் தேற்றத்தின்கண் வந்தது. இப்பாட்டான் முதற்கடவுள துண்மை கூறப்

பட்டது.

(தெளிபொருள் விளக்கப் பதவுரை.)—எழுத்து எல்லாம் - எழுத்துகளெல்லாம், அகரம் முதல - அகரமாகிய முதலையுடையன; (அதுபோல) உலகு - உலகமானது, ஆதி பகவன் முதற்று - ஆதி பகவனாகிய முதலை யுடையது.

உ. கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவ
னற்று டொழாஅ ரெனின்.

* ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்னும் ஆறுக்கும் பக மென்னும் பொருண்மையால் பகவனார் என்றது இவ்வாறு குணங்களையுமுடையோ னென்பது பொருள்.

## கூ ௧-ம் அதி. கடவுள் வாழ்த்து

(பரி-ரை.) எ-து,—எல்லா நூல்களையுங் கற்றவர்க் கக்கல்வி யறிவானுய பயன்யாது? மெய்யுணர்வினை யுடையவனது நல்ல தாள்களைத் தொழா ராயின், எ-று.

எவனென்னும் வினாப்பெயர் என்னென்றாய் ஈண் டின்மை குறித்து நின்றது. கொல் லென்பது அசைநிலை. பிறவிப்பிணிக்கு மருந்தாகலின், நற்றா ளென்றார். ஆகம அறிவிற்குப் பயன் அவன்றாளைத் தொழுது பிறவி யறுத்த லென்பது இதனாற் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—வால் அறிவன்-மெய்யறிவை உடைய கடவுளது, நல் தாள்-நல்ல பாதங்களை, தொழார் எனின் - வணங்கார் ஆயின், கற்றதனால் - (நூல்களைக் கற்றவர்க்கு) அக்கல்வியால், ஆய - உண்டாகிய, பயன் - பிரயோசனம், என்-யாது.

௩. மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

(பரி-ரை.) எ-து,—மலரின்கணேகி சென்றவனது மாட்சிமைப்பட்ட

அடிகளைச் சேர்ந்தார் எல்லாவுலகிற்கு மேலாய வீட்டுலகின்கண் அழிவின்றி வாழ்வார், எ-று.

அன்பால் நினைவாரது உள்ளக்கமலத்தின்கண் அவர் நினைந்த வடிவொடு விரைந்துசேறலின் ஏகினானென இறந்தகாலத்தாற் கூறினார். என்னை? * "வாராக்காலத்து நிகழுங்காலத்து, மோராவகு வரூஉம் வினைசொற்கிளவி, யிறந்தகாலத்துக் குறிப்பொடு கிளத்தல், விரைந்த பொருள வென்மனார் புலவர்" என்பதோத் தாகலின். இதனைப் "பூமேனடந்தான்" என்பதோர்பெயர் பற்றிப் பிறிது கடவுட் கேற்றுவாருமுளர். சேர்தல்-இடைவிடாது நினைத்தல்.

(தே-ப-ரை)—மலர்மிசை - (அன்பரது நெஞ்சமாகிய) தாமரைமலரில், ஏகினான் - சென்ற கடவுளது, மாண்அடி - பெருமைபொருந்திய பாதங்களை, சேர்ந்தார் - (இடைவிடாது) சிந்தித்தவர், நிலமிசை - (எல்லா உலகங்களுக்கு) மேலாகிய முத்தியுலகத்தில், நீடுவாழ்வார் - அழிவில்லாமல் வாழ்வார்.

ச. வேண்டுதல்வேண் டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில.

* தொல்காப்பியம் வினையியல் சஉ.



(பரி-ரை.) எ-து,—ஒரு பொருளையும் விழைதலும் வெறுத்தலும் இல்லாதவன் அடியைச் சேர்ந்தார்க் கெக்காலத்தும் பிறவித்துன்பங்கள் உளவாகா, எ-று.

பிறவித்துன்பங்களாவன,—தன்னைப்பற்றி வருவனவும், பிறவுயிர்களைப் பற்றிவருவனவும், தெய்வத்தைப்பற்றிவருவனவும் என மூவகையான் வருந்துன்பங்கள். அடிசேர்ந்தார்க்கும் அவ்விரண்டுமின்மையின், அவை காரண

மாக வரு மூவகைத் துன்பங்களும் இலவாயின.

(தே-ப-ணா)—வேண்டுதல் - விருப்பும், வேண்டாமை-வெறுப்பும், இலான் - இல்லாத கடவுளது, அடி - பாதங்களை, சேர்ந்தார்க்கு - இடைவிடாது சிந்திப்பவர்க்கு, யாண்டும்-எக்காலத்தும், இடும்பை-பிறவித்துன்பங்கள், இல-உண்டாவனவல்ல.

ரு. இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

(பரி-ரை.) எ-து,—மயக்கத்தைப் பற்றி வரும் நல்வினை தீவினை யென்னும் இரண்டு வினையும் உளவாகா, இறைவனது மெய்ம்மைசேர்ந்த புகழை விரும்பினாரிடத்து, எ-று.

இன்ன தன்மைத்தென ஒருவ ராலும் கூறப்படாமையின் அவிச்சையை இருளென்றும், நல்வினையும் பிறத்தற் கேதுவாகலான் இருவினையுஞ் சேரா என்றுங் கூறினார். இறைமைக் குணங்கள் இலராயினாரை உடையரெனக் கருதி அறிவிலார் கூறுகின்ற புகழ்கள் பொருள் சேரா ஆகலின், அவை முற்றவும் உடைய இறைவன் புகழே பொருள்சேர் புகழெனப்பட்டது. புரிதல்-எப்பொழுதுஞ் சொல்லுதல்.

(தே-ப-ணா)—இறைவன் - கடவுளது, பொருள் சேர்-மெய்ம்மை சேர்ந்த, புகழ்-கீர்த்தியை, புரிந்தார்மாட்டு-விரும்பினவரிடத்து, இருள்சேர் - மயக்கத்தைப்பற்றி வருகின்ற, யும்- (நல்வினை தீவினையென்னும்) இரண்டுவினைகளும், சேரா - டாகாவாம்.

சு. பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

(பரி-ரை.) எ-து,—மெய் வாய் கண் மூக்குச் செவியென்னும் பொறிகளை வழியாக வுடைய ஐந்தவாவினையும் அறுத்தானது மெய்யான வொழுக்க நெறியின்கண் வழுவாது நின்றார் பிறப்பின்றி யெக்காலத்தும் ஒருதன்மையராய் வாழ்வார், எ-று.

(பரி-ரை.) எ-து,—எல்லா நூல்களையுங் கற்றவர்க் கக்கல்வி யறிவானுய பயன்யாது? மெய்யுணர்வினை யுடையவனது நல்ல தாள்களைத் தொழா ராயின், எ-று.

என்னென்னும் வினைப்பெயர் என்னென்றாய் ஈண் டின்மை குறித்து நின்றது. கொல் லென்ப தசைநிலை. பிறவிப்பிணிக்கு மருந்தாகலின், நற்று ளென்றார். ஆகம அறிவிற்குப் பயன் அவன்றாளைத் தொழுது பிறவி யறுத்த லென்பது இதனாற் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—வால் அறிவன்-மெய்யறிவை உடைய கடவுளது, நல் தாள்-நல்ல பாதங்களை, தொழாஅர் எனின் - வணங்கார் ஆயின், கற்றதனால் - (நூல்களைக் கற்றவர்க்கு) அக்கல்வியால், ஆய - உண்டாகிய, பயன் - பிரயோசனம், என்-யாது.

---

ரு. மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

(பரி-ரை.) எ-து,—மலரின்கண்ணே சென்றவனது மாட்சிமைப்பட்ட அடிகளைச் சேர்ந்தார் எல்லாவுலகிற்கு மேலாய வீட்டுலகின்கண் அழிவின்றி வாழ்வார், எ-று.

அன்பால் நினைவாரது உள்ளக்கமலத்தின்கண் அவர் நினைந்த வடிவொடு விரைந்துசேறலின் ஏகினானென இறந்தகாலத்தாற் கூறினார். என்னை? *"வாராக்காலத்து நிகழுங்காலத்து, மோராவரு வருூஉம் வினைசொற்கிளவி, யிறந்தகாலத்துக் குறிப்பொடு கிளத்தல், விரைந்த பொருள வென்மனார் புலவர்" என்பதோத் தாகலின், இதனைப் "பூமேனடந்தான்" என்பதோர்பெயர் பற்றிப் பிறிது கடவுட் கேற்றுவாருமுளர். சேர்தல்-இடைவிடாது நினைத்தல்.

(தெ-ப-ரை.)—மலர்மிசை - (அன்பரது நெஞ்சமாகிய) தாமரைமலரில், ஏகினான் - சென்ற கடவுளது, மாண் அடி - பெருமை பொருந்திய பாதங்களை, சேர்ந்தார் - (இடைவிடாது) சிந்தித்தவர், நிலமிசை - (எல்லா உலகங்களுக்கு) மேலாகிய முத்தியுலகத்தில், நீடுவாழ்வார் - அழிவில்லாமல் வாழ்வார்.

ச. வேண்டுதல்வேண் டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில.

* தொல்காப்பியம் வினையியல் சச.

## க-ம் அதி. கடவுள் வாழ்த்து



(பரி-ரை.) எ-து,—ஒரு பொருளையும் விழைதலும் வெறுத்தலும் இல்லாதவன் அடியைச் சேர்ந்தார்க்கு எக்காலத்தும் பிறவித்துன்பங்கள் உளவாகா, எ-று.

பிறவித்துன்பங்களாவன,—தன்னைப்பற்றி வருவனவும், பிறவுயிர்களைப் பற்றிவருவனவும், தெய்வத்தைப்பற்றிவருவனவும் என மூவகையான் வருந் துன்பங்கள். அடிசேர்ந்தார்க்கும் அவ்விரண்டுமின்மையின், அவை காரணமாக வரு மூவகைத் துன்பங்களும் இலவாயின.

(தே-ப-ரை.)—வேண்டுதல் - விருப்பும், வேண்டாமை-வெறுப்பும், இலான் - இல்லாத கடவுளது, அடி - பாதங்களை, சேர்ந்தார்க்கு - இடைவிடாது சிந்திப்பவர்க்கு, யாண்டும்-எக்காலத்தும், இடும்பை-பிறவித்துன்பங்கள், இல-உண்டாவனவல்ல.

ரு. இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

(பரி-ரை.) எ-து,—மயக்கத்தைப் பற்றி வரும் நல்வினை தீவினை யென்னும் இரண்டு வினையும் உளவாகா, இறைவனது மெய்ம்மைசேர்ந்த புகழை விரும்பினாரிடத்து, எ-று.

இன்ன தன்மைத்தென ஒருவாற்றானும் கூறப்படாமையின் அவிச்சையை இருளென்றும், நல்வினையும் பிறத்தற் கேதுவாகலான் இருவினையுஞ் சேரா என்றும் கூறினார். இறைமைக் குணங்கள் இலராயினாரை உடையரெனக் கருதி அறிவிலார் கூறுகின்ற புகழ்கள் பொருள் சேரா ஆகலின், அவை முற்றவும் உடைய இறைவன் புகழே பொருள்சேர் புகழெனப்பட்டது. புரி

தல்-எப்பொழுதுஞ் சொல்லுதல்.

(தே-ப-ணா.)—இறைவன் - கடவுளது, பொருள் சேர்-மெய்ம்மை சேர்ந்த, புகழ்-கீர்த்தியை, புரிந்தார்மாட்டு-விரும்பினவரிடத்து, இருள்சேர் - மயக்கத்தைப்பற்றி வருகின்ற, இருவினையும்- (நல்வினை தீவினையென்னும்) இரண்டுவினைகளும், சேரா - உண்டாகாவாம்.

---

சு. பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

(பரி-ணா.) எ-து,—மெய் வாய் கண் மூக்குச் செவியென்னும் பொறிகளை வழியாக வுடைய ஐந்தவாவினையும் அறுத்தானது மெய்யான வொழுக்க நெறியின்கண் வழுவாதுநின்றார் பிறப்பின்றி யெக்காலத்தும் ஒருதன்மையராய் வாழ்வார், எ-று.

## சு ௧-ம் அதி. கடவுள் வாழ்த்து

புலன்கள் ஐந்தாகலான், அவற்றின்கட் செல்கின்றஅவாவும்ஐந்தாயிற்று. ஒழுக்கநெறி ஐந்தவித்தானாற் சொல்லப்பட்டமையின் ஆண்டை ஆறனுருபு செய்யுட்கிழமைக்கண் வந்தது "கபிலரது பாட்டு" என்பது போல, இவை நான்கு பாட்டானும் இறைவனை நினைத்தலும் வாழ்த்தலும் அவனெறி நிற்றலுஞ் செய்தார் வீடுபெறுவரென்பது கூறப்பட்டது.

(தே - ப - ணா.)—பொறிவாயில் - ஐம்பொறிகளை வழிகளாக வுடைய, ஐந்து - ஐந்தாசைகளையும், அவித்தான் - அறுத்தவனது, பொய்தீர் - மெய்ம்மையாகிய, ஒழுக்கநெறி - ஒழுக்க வழியில், நின்றார் - (வழுவாது) நின்றவர், நீடு வாழ்வார் - அழிவில்லாமல் வாழ்வார்.

---

எ. தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிது.

(பரி-ரை.) எ-து,—ஒருவாற்றானும் தனக்கு நிக ரில்லாதவனது தாளைசசேர்ந்தார்க் கல்லது, மனத்தின்கண் நிகழுந் துன்பங்களை நீக்குத லுண்டாகாது, எ-று.

* "உறற்பால தீண்டாவிடுத லரிது." என்றாற்போல ஈண்டு அருமைஇன்மைமேல் நின்றது. தாள் சேராதார் பிறவிக்கேதுவாய காம வெகுளி மயக்கங்களை மாற்றமாட்டாமையின், பிறந்தவற்றான் வருந் துன்பங்களுள் அழுந்துவ ரென்பதாம்.

(தே-ப-ரை)—தனக்கு—, உவமை இல்லாதான் - (ஒருவிதத்தாலும்) ஒப்பில்லாத கடவுளது, தாள் - அடிகளை, சேர்ந்தார்க்கு - இடைவிடாது சிந்தித்தவர்க்கு, அல்லால்-அல்லாமல், மனம் கவலை-நெஞ்சிலே தோன்றுகின்ற துன்பங்களை, மாற்றல்-நீக்குதல், அரிது-கூடாது.

அ. அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்த லரிது.

(பரி-ரை.) எ-து,—அறக்கடலாகிய அந்தணனது தாளாகிய புணையைச் சேர்ந்தார்க்கல்லது அதனிற் பிறவாகியகடல்களை நீந்தல் அரிது, எ-று.

அறம், பொருள், இன்பம் என உடனெண்ணப்பட்ட மூன்றனுள் அறத்தை முன்னர்ப் பிரித்தமையான், ஏனைப் பொருளும் இன்பமும் பிற எனப்

* நாலடியார் பழவினை க.



பட்டன. பல வேறுவகைப்பட்ட அறங்களெல்லாவற்றையுந் தனக்கு வடிவாக உடையவனாகலின், அறவாழியந்தண னென்றார். அறவாழி யென்பதனைத் தருமசக்கரமாக்கி அதனையுடைய அந்தணனென உரைப்பாருமுளர். அப்புணையைச்சேராதார்கரைகாணாது அவற்றுள்ளே அழுந்துவாராகலின், நீந்தலரிதென்றார். இஃதேகதேச வுருவகம்.

(தே-ப-ரை)—அறம் ஆழி அந்தணன் - தருமக்கடலாகிய

கடவுளது, தாள் - அடியாகிய (மரக்கலத்தை), சேர்ந்தார்க்கு அல்லால்-சேர்ந்தவர்க்கு அல்லாமல், பிறவாழி - (அதனின்) வேறாகிய கடல்களை, நீந்தல் - கடத்தல், அரிது - கூடாது

---

௯ கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
தாளை வணங்காத் தலை

(பரி-ரை) எ-து,—தத்தமக் கேற்ற புலன்களைக் கொள்கையில்லாத பொறிகள்போலப் பயன்படுத லுடையவல்ல, எண்வகைப்பட்ட குணங்களை யுடையானது தாளை வணங்காத தலைகள். எ-று.

எண்குணங்களாவன,—தன் வயத்தனாதல், தூய வுடம்பினனாதல், இயற்கை யுணர்வினனாதல், முற்று முணர்தல், இயல்பாகவே பாசங்களி னீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பி லின்பமுடைமை, என இவை. இவ்வாறு சைவாகமத்திற் கூறப்பட்டது. * அணிமாவை முதலாக வுடையன எனவும், ‡ கடையிலா அறிவை முதலாக வுடையன எனவும் உரைப்பாருமுளர். காணாத கண்முதலியனபோல வணங்காத தலைகள்பயனில எனத் தலைமேல் வைத்துக் கூறினாரேனும், இனம்பற்றி வாழ்த்தாத நாக்களும் அவ்வாறே பயனில வென்பதூஉங்கொள்க. இவை மூன்றுபாட்டானும் அவனை நினைதலும் வாழ்த்தலுஞ் செய்யாவழிப் படுங்குற்றங் கூறப்பட்டது.

(தே-பா)—கோள் இல் - தத்தமக்கேற்ற (புலன்களை) கொள்ளுகையில்லாத, பொறியின் - பொறிகள்போல, எண்குணத்தான்-எண்வகைப்பட்ட குணங்களையுடையவனது, தாளை-அடிகளை, வணங்காத்தலை - தொழாத தலைகள், குணமிலவே - பயன்படுதலில்லாதனவேயாம்

---

* அணிமா முதலிய எண் குணங்களாவன —அணிமா, மகிமா, லகிமா, கரிமா பிராத்தி, பிராகாமியம், ஈசிதை, வசிதை எனவிவை.

‡ கடையிலா வறிவு முதலிய எண்குணங்களாவன:—கடையிலா வறிவு, கடையிலா காட்சி, கடையிலா வீரியம், கடையிலாவின்பம், நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயுவின்மை, அழியாவியல்பு எனவிவை. இவ்வாறு ஆருகத நூலிற் கூறப்பட்டது.

௰. பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார்.

(பரி-ரை.) எ-து,—இறைவ னடியென்னும் புணையைச்சேர்ந்தார் பிறவியாகிய பெரிய கடலை நீந்துவர்; அதனைச சேராதார் நீந்தமாட்டாராய் அதனுளழுந்துவர், எ-று.

காரண காரியத்தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலின், பிறவிப்பெருங் கட லென்றார். சேர்ந்தாரென்பது சொல்லெச்சம். உலகியல்பை நினையாது இறைவ னடியையே நினைப்பார்க்குப் பிறவியறுதலும், இவ்வாறன்றி மாறி நினைப்பார்க்கு அஃதறாமையும் ஆகிய இரண்டும் இதனால் கூறப்பட்டன.

(தே-ப-ரை)—இறைவன் - தலைவனது, அடி - பாதமாகிய (மரக்கலத்தைச் சேர்ந்தவர்), பிறவிப் பெருங்கடல்-பிறவியாகிய பெரிய கடலை, நீந்துவர் - கடப்பார்: சேராதார் - (அதனைச்) சேராதவர். நீந்தார் - கடக்கமாட்டார்.

## உ-ம் அதிகாரம்—வான்சிறப்பு

அஃதாவது அக்கடவுள தாணையான் உலகமும் அதற் குறுதியாகிய அறம்பொருளின்பங்களும் நடத்தற் கேதுவாகிய மழையினது சிறப்புக் கூறுதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

க. வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென் றுணரற் பாற்று

(பரி-ரை.) எ-து,—மழை யிடையறாது நிற்ப உலகம் நிலைபெற்று வருதலான், அம்மழைதான் உலகத்திற் கமிழ்தமென் றுணரும் பான்மை யுடைத்து, எ-று.

நிற்ப என்பது நின்றெனத் திரிந்து நின்றது. உலகமென்றது ஈண்டுயிர்களை. அவை நிலைபெற்றுவருதலாவதுபிறப்பு இடையறாமையின் என்றும் உடம்போடு காணப்பட்டு வருதல். அமிழ்தம் உண்டார் சாவாது நிலைபெறுத

வின், உலகத்தை நிலைபெறுத்துகின்ற வானை அமிழ்தமென்றுணர்க என்றார்.

(தே-ப-ரை.)—வான் - மழையானது, நின்று - (நடுவே நீங்காது) நிற்க, உலகம் - உயிர்களானவை, வழங்கிவருதலான்-நிலைபெற்று வருகையினால், தான்-(அம்மழை) தான், அமிழ்தம்என்று-(உயிர்களுக்கு) அமிர்த மென்று, உணரல் பாற்று - அறியப்படுந் தன்மையை யுடையது.

---

## உ-ம் அதி. வான்சிறப்பு ௯

உ. துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை.

(பரி-ரை.) எ-து,—உண்பார்க்கு நல்ல உணவுகளை யுளவாக்கி அவற்றை யுண்கின்றார்க்குத் தானுமுணவாய் நிற்பதூஉ மழை, எ-று.

தாஉம் உணவாதலாவது தண்ணீராய் புணைப்படுதல். சிறப்புடைய வுயர்திணைமேல் வைத்துக் கூறினமையின் அஃறிணைக்கும் இஃதொக்கும். இவ்வா றுயிர்களது பசியையும் நீர்வேட்கையையும் நீக்குதலின், அவை வழங்கிவருதலுடையவாயின என்பதாம்.

(தே-ப-ரை)—துப்பார்க்கு - உண்பவர்க்கு, துப்பாய-நன்மையாகிய, துப்பாக்கி - உணவுகளை உண்டாக்கி, துப்பார்க்கு-(அவ்வுணவுகளை) உண்பவருக்கு, துப்பாயதூம் - (தானும்) உணவாய் நிற்பதும், மழை—.

---

ங. விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி

(பரி-ரை) எ-து,—மழை வேண்டுங் காலத்துப் பெய்யாது பொய்க்குமாயின், கடலாற் சூழப்பட்ட அகன்ற வுலகத்தின்கண் நிலைபெற் றுயிர்களை வருத்தும் பசி, எ-று.

கடலுடைத் தாயினும் அதனாற் பயனில்லை யென்பார், விரிநீர்வியனுலகத்தென்றார். உணவின்மையின் பசியான் உயிர்க ளிறக்கும் மென்பதாம்.

(தே-ப-ரை)—விண் - மழையானது, நின்று - (பெய்யவேண்டுங் காலத்தில்) பெய்யாமல், பொய்ப்பின் - பொய்க்குமாயின், விரிநீர்-கடலாற் சூழப்பட்ட, வியன் உலகத்துள்-பரந்த உலகத்தில், பசி—, நின்று-நிலைபெற்று, உடற்றும் - (உயிர்களை) வருத்தும்.

---

ச. ஏரி னுழாஅ ருழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால்

(பரி-ரை.) எ-து,—உழவர் ஏரா னுழுதலைச் செய்யார் மழையென்னும் வருவாய் தன்பயன் குன்றின், எ-று.

குன்றியக்காலென்பது குறைந்து நின்றது. உணவின்மைக்குக் காரணங் கூறியவாறு.

(தே-ப-ரை)—புயல் என்னும்-மழை என்கின்ற,வாரி-வருவாய், வளம் குன்றியக்கால் - (தன்) பயன் குறையுமாயின், உழவர் - பயிர்செய் மாந்தர், ஏரின்-ஏரினால், உழார் - உழுதலைச் செய்யார்.

---

2

## ௧௦ உ-ம் அதி. வான்.

ரு. கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
யெடுப்பதூஉ மெல்லா மழை.

(பரி-ரை.) எ-து,—பூமியின்கண் வாழ்வாரைப் பெய்யாது நின்று கெடுப்பதூஉம், அவ்வாறு கெட்டார்க்குத் துணையாய்ப்பெய்து முன்கெடுத்தாற் போல எடுப்பதூஉம் இவை யெல்லாம் வல்லது மழை, எ-று.

மற்று வினைமாற்றின்கண் வந்தது. ஆங் கென்பது மறுதலைத்தொழி லுவமத்தின்கண் வந்த உவமச்சொல். கேடும் ஆக்கமும் எய்துதற் குரியார் மக்களாதலின் கெட்டார்க் கென்றார். எல்லாமென்றது அம்மக்கண் முயற்சி வேறுபாடுகளாற் கெடுத்தல் எடுத்தல்கள்தாம் பலவாதல் நோக்கி, வல்லதென்பது அவாய்நிலையான் வந்தது. மழையின தாற்றல் கூறியவாறு.

(தே-ப-ரை)—கெடுப்பதும் - (பெய்யாதுநின்று) கெடுப்பதும், கெட்டார்க்கு - (அவ்வாறு) கெட்டவர்க்கு, சார்வாய்-துணையாய்ப் (பெய்து), மற்று அங்கே - முன்கெடுத்ததுபோலவே, எடுப்பதும் - எடுப்பதும், எல்லாம் - (இவை) எல்லாம் (வல்லது), மழை—.

---

௬. விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது.

(பரி-ரை.) எ-து,—மேகத்திற் றுளிவீழிற் காண்ப தல்லது, வீழாதாயின் அப்பொழுதே பசும் புல்லினது தலையையுங் காணடலரிது, எ-று.

விசும்பு - ஆகுபெயர். மற்று - வினை மாற்றின்கண் வந்தது. இழிவுசிறப் பும்மை விகாரத்தாற் றொக்கது. ஓரறி வுயிரும் இல்லையென்பதாம்.

(தே-ப-ரை.)—விசும்பின் - மேகத்தினின்றும், துளி - துளிகள், வீழின் அல்லால் - வீழிற்காண்பதல்லது, மற்று அங்கே-வீழாதாயின் அப்பொழுதே, பசும்புல் தலை - பசும்புல்லினது தலையையும், காண்பது அரிது - காணுதல்கூடாது.

௭. நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின்.

(பரி-ரை.) எ-து,—அளவில்லாத கடலுந் தன்னியல்பு குறையும். மேகந் தான் அதனைக்குறைத் ததன்கட் பெய்யாது விடுமாயின், எ-று.

உம்மை சிறப்பும்மை. தன்னியல்பு குறைதலாவது நீர்வாழுயிர்கள் பிறவாமையும * மணி முதலிய படாமையுமாம் ஈண்டுக் குறைத்தலென்றது முகத்

* மணி, முத்தும் பவளமும். "வைகாசியிலே ஞாயிற்றுச் சோதியின் மழையிலே முத்துக் கரு; ஐப்பசி பூரத்து மழையிலே பவளத்துக்குக் கரு" என்பர்,



தலை; அது ‡ "கடல் குறைபடுத்தநீர்" "கடல் குறைபடவெறிந்து" என்பதனுலும் அறிக. மழைக்கு முதலாய கடற்கு மழைவேண்டும் என்பதாம். இவை யெழுபாட்டானும் உலக நடத்தற் கேதுவாதல் கூறப்பட்டது.

(தே-ப-ரை)—எழிலிதான்-மேகந்தான், தடிந்து - அதனீரைக் குறைத்து, நல்காதாகிவிடின் - அதனிடத்துப் பெய்யாதாகிவிடின், நெடுங்கடலும் - பெரிய கடலும், தன் நீர்மை-தன்னியல்பு, குன்றும் - குறையும்

---

அ. சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு

(பரி-ரை.) எ-து,—தேவர்கட்கும இவ்வுலகின் மக்களாற் செய்யப்படும் விழவும் பூசையும் நடவாது, மழைபெய்யாதாயின். எ-று.

நைமித்திகத்தோடு கூடிய நித்திய மென்றார் ஆகலின், செல்லாதென்றார். நித்தியத்திற் றாழ்வு தீரச் செய்வது நைமித்திய மாதலின் அதனை முற் கூறினார். உம்மை சிறப்பும்மை.

(தே-ப-ரை)—வானம் - மழை, வறக்குமேல்-பெய்யாதாயின், வானோர்க்கும் - தேவர்களுக்கும், ஈண்டு - இவ்வுலகத்தில், சிறப்பொடு - திருவிழாவுடனே, பூசனை-நித்தியபூசை, செல்லாது - நடவாது

---

கூ. தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்.

(பரி ரை.) எ-து,—அகன்ற வுலகின்கண் தானமுந் தவமுமாய இரண்டறமும் உளவாகா, மழை பெய்யாதாயின், எ-று.

தானமாவது நன்னெறியான் வந்த பொருள்களைத் தக்கார்க்கு உவகையோடு கொடுத்தல். தவமாவது மனம் பொறிவழி போகாமல் நிற்றற்பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கல் முதலாயின. பெரும்பான்மைபற்றித் தானம் இல்லறத்தின் மேலும், தவம் துறவறத்தின் மேலும நின்றன.

(தே-ப-ரை.)—வானம்-மழை, வழங்காதெனின் - பெய்யாதாயின், வியன் உலகம் - பெரிய உலகத்தில், தானம் தவம் இரண்டும்-தானமும் தவமும் ஆகிய இரண்டும், தங்கா - உண்டாகாவாம்.

---

‡ பரிபாடல், ௨௦. கல். இயயம்.



௨௦. நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு.

(பரி ரை.) எ-து,—எவ்வகை மேம்பாட்டார்க்கும் நீரையன்றி உலகியல் அமையாதாயின், அந்நீர் இடையறாது ஒழுகும் ஒழுக்கமும் வானையின்றி அமையாது, எ-று.

பொருளின்பங்களை உலகிய லென்றார், அவை இம்மைக்கண்ணவாகலின். இடையறாது ஒழுகல் எக்காலத்தும் எவ்விடத்தும் உளதாதல். நீரின்றமையா துலகென்பது எல்லாரானுந் தெளியப்படுதலின், அதுபோல வொழுக்கமும் வானின் றமையாமை தெளியப்படுமென்பார், நீரின் றமையா துலகெனி னென்றார். இதனை நீரையின்றியமையா துலகாயின் எத்திறத்தார்க்கு மழையையின்றி யொழுக்க நிரம்பாதென வுரைப்பாருமுளர். இவை மூன்று பாட்டானும் அறம் பொருளின்பங்கள் நடத்தற் கேதுவாதல் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—யார் யார்க்கும்-எவ்வகை மேம்பாட்டோர்க்கும், நீர்—நீரை, இன்றி-இல்லாமல். உலகு - உலகியலானது, அமையாது எனின்-பொருந்தாதாயின், ஒழுக்கு-(அந்நீரினது நடுவே நீங்காத) ஒழுக்கமும். வான்-மழையை, இன்றி-இல்லாமல், அமையாது-பொருந்தாது.

---

## ௩-ம் அதிகாரம்—நீத்தார்பெருமை.



அஃதாவது முற்றத் துறந்த முனிவரது பெருமை கூறுதல். அவ்வறமுதற்பொருள்களை உலகிற்குள்ளவா றுணர்த்துவார் அவர் ஆகலின், இது வான சிறப்பின்பின் வைக்கப் பட்டது.

௧. ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு.

(பரி-ரை) எ-து,—தமக்குரிய வொழுக்கத்தின் கண்ணே நின்று துறந்தாரது பெருமையை விழுமிய பொருள்கள் பலவற்றுள்ளும் இதுவே விழுமிதென விரும்பும் நூல்களது துணிவு, எ-று.

தமக்குரிய வொழுக்கத்தின் கணணே ரின்று துறத்தலாவது,—தத்தம் ருணத்திற்கும் நிலைமைக்கும் உரிய வொழுக்கங்களை வழுவாதொழுக அறம் ளரும், அறம்வளரப் பாவந்தேயும், பாவந்தேய அறியாமை நீங்கும், அறியா மை நீங்க நித்த அநித்தங்களது வேறுபாட்டுணர்வும் அழிதன் மாலையவாய )ம்மை மறுமை யின்பங்களின் உவாப்பும் பிறவித் துன்பங்களுந் தோன்றும், ளவைதோன்ற வீட்டின்கண் ஆசை யுண்டாம், அஃதுண்டாகப் பிறவிக்குக் ாரணமாகிய பயனில் முயற்சிகளெல்லாம் நீங்கி வீட்டிற்குக் காரணமாகிய யாகமுயர்சியுண்டாம், அஃதுண்டாக மெய்யுணர்வு பிறந்து புறப்பற்று

## ௩-ம் அதி. நீத்தார்பெருமை ௯௬

இய எனதென்பதும் அகப்பற்றாகிய யானென்பதும் விடும் ஆகலான், இவ்வி ரண்டு பற்றையும் இம்முறையே உவர்த்துவிடுதலெனக்கொள்க. பனுவலெ னப் பொதுபடக் கூறிய அதனான், ஒன்றையொன்றொவ்வாதசமய நூல்க ளெல்லாவற்றிற்கும் இஃதொத்த துணிவென்பது பெற்றாம். செய்தாரது துணிவு பனுவல் மேலேற்றப்பட்டது.

(தே-ப-ரை)—பனுவல் - நூல்களது, துணிவு - நிச்சயமானது, ஒழுக்கத்து - (தமக்குரிய) ஒழுக்கத்தில் நின்று, நீத்தார்-துறந்தவ ரது, பெருமை-மகிமையை, விழுப்பத்து-மேலான பல பொருள்க ளுள்ளும், வேண்டும்-(இதுவேமேலானதென்று) விரும்பும்.

---

௨. துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
இறந்தாரை யெண்ணிக் கொண்டற்று.

(பரி-ரை.) எ-து.—இருவகைப் பற்றினையும் விட்டாரது பெருமையை இவ்வளவென் றெண்ணாற்கூறி அறியலுறின், அளவு படாமையான், இவ் வுலகத்துப் பிறந் திறந்தாரை யெண்ணி யித்துணையரென அறியலுற்றாற் போலும், எ-று.

முடியா தென்பதாம். கொண்டா லென்னும் வினையெச்சங்கொண்டெ னத் திரிந்து நின்றது.

(தே-ப-ரை.) துறந்தார் - (அகங்கார மமகாரங்களை) விட்டவ து, பெருமை - மகிமையை, துணைக்கூறின் - (எண்ணிக்கையினால் சொல்லி) அறியப்புகுந்தால், (அளவுபடாமையால்) வையத்து - இவ்வுலகத்தில், இறந்தாரை - (பிறந்து) இறந்தவரை, எண்ணிக் கொண்டற்று-எண்ணி (இத்தனைபேர்களென்று) அறியப் புகுந்தாற் போலும்.

௩. இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு.

(பரி-ரை.) எ-து,—பிறப்பு வீடென்னும் இரண்டினது துன்பவின்பக் கூறுபாடுகளை ஆராய்ந்தறிந்து, அப்பிறப்பறுத்தற்கு இப்பிறப்பின்கண் துற வறத்தைப் பூண்டாரது பெருமையே உலகின்கணுயர்ந்தது, எ-று.

* "தெரி மாண்டமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்" என்புழிப்போல இருமை யென்பதின் டெண்ணின்கணின்றது. பிரிநிலையேகாரம் விகாரத் தாற் றொக்கது. இதனால் திகிரியுருட்டி உலகமுழுதாண்ட அரசர் முதலாயி

௩-ம் அதி. நீத்தார்பெருமை

னோர் பெருமை பிரிக்கப்பட்டது. இவைமூன்று பாட்டானும் நீத்தாரது பெரு மையே எல்லாப் பெருமையினு மிக்கதென்பது கூறப்பட்டது.

(தே-ப-ரை.)—இருமை - (பிறப்புவீடென்னும்) இரண்டினது வகை - (துன்பவின்பக்) கூறுபாடுகளை, தெரிந்து - ஆராய்ந்து, (அப் பிறப்பை நீக்குதற்கு) ஈண்டு-இப்பிறப்பில், அறம் - துறவறத்தை, பூண்டார் - கொண்டவரது, பெருமை-மகிமையே, உலகு - உலகத் தில், பிறங்கிற்று - உயர்ந்தது.

---

௪. உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து.

(பரி-ரை.) எ-து,—திண்மை யென்னுந் தோட்டியாற் பொறிகளாகிய யானை யைந்தனையும் தத்தம் புலன்களமேற் செல்லாமற்காப்பான் எல்லா நிலத்தினு மிக்கதென்று சொல்லப்பட்ட வீட்டுநிலத்திற் கோர்வித்தாம், எ-று.

இஃது ஏகதேசவுருவகம் இன்மை யீண்டறிவின்மேற்று. அந்நிலத்திற் சென்று முளைத்தலின் வித்தென்றார்; ஈண்டுப பிறந்திறந்து வருமகன் அல்ல னென்பதாம்.

(தே-ப-ரை)—உரன் என்னும் தோட்டியான்-அறிவென்னும் அங்குசத்தால், ஓர் ஐந்தும்-(பொறிகளாகிய யானைகள்) ஐந்தையும், காப்பான் -(தன் தன் புலன்களின்மேல் செல்லாமல்) காப்பவன், வரன் என்னும் வைப்புக்கு-(எல்லா நிலங்களினும்) மேலானதென்று சொல்லப்படுகிற மோக்ஷ நிலத்துக்கு, ஓர் வித்து-ஒருவித்தாவான்.

---

௫. ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமா
னிந்திரனே சாலுங் கரி.

(பரி-ரை ) எ-து,—புலன்களிற் செல்கின்ற அவாவைந்தனையும் அடக்கினனது வலிக்கு அகலற வானத் துள்ளா ரிறைவனாகிய இந்திரனே அமையுஞ் சான்று, எ-று.

ஐந்து மென்னு முற்றும்மையும் ஆற்றற்கென்னு நான்கனுருபுஞ் செய்யுள்விகாரத்தாற் றொக்கன. தான் ஐந்தவியாது சாபமெய்தி நின்று அவித்தானது ஆற்ற லுணர்த்தினான் ஆதலின், இந்திரனே சாலுங்கரி யென்றார்.

(தே-ப-ரை )—ஐந்து அவித்தான்-(புலன்களிற் செல்லுகின்ற) ஐந்தாசைகளையு மொழித்தவனது, ஆற்றல்-வல்லமைக்கு, அகல் விசும்பு உளார்-அகன்ற பொன்னுலகத்துள்ளதேவர்க்கு, கோமான்-தலைவனாகிய, இந்திரனே-தேவேந்திரனே, சாலும் கரி-மிகப் பெருமையான சாக்ஷியாம்.

---

வருந்தப் பின்னே வந்து வருத்துமென்பது அநுமானத்தானு மறிந்து ஒழியற்பால னென்பது தோன்றத் தானென்றும், அத்தன்மையான் ஒழியாமைக்குக் காரணம் மயக்கமென்பது தோன்ற என்கொலோவென்றுங் கூறினார். இவை மூன்றுபாட்டானும் பொதுவகையான் விலக்கப்பட்டது.

(தே - ப - ரை.)—தன்னுயிர்க்கு - (பிறர்செய்யுந் துன்பந்தருமவைகள்) தனதுயிர்க்கு, இன்னாமை - துன்பந்தருமவையாந்தன்மையை, அறிவான் - (அனுபவித்து) அறிபவன், மன்னுயிர்க்கு - நிலையுள்ள பிறவுயிர்களுக்கு, இன்னா - அத்துன்பந்தருமவைகளை, தான்செயல் - தான்செய்தல், எவன் - யாது.

---

௯. பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்.

(பரி-ரை.) இ-ள்.—துறந்தவர் பிறர்க்கின்னாதனவற்றை ஒருபகலது முற்கூற்றின்கட் செய்வராயின், தமக்கின்னாதன அப்பகலது பிற்கூற்றின்கண் அவர் செய்யாமற் றாமேவரும், எ-று.

முற்பகல் பிற்பகலென்பன பின் முன்னாகத் தொக்க ஆறாம் வேற்றுமைத்தொகை. தவமுடைமையின், அவ்வினைய கடிதினும் எளிதினும் வரும்; அதனால் அவைசெய்யற்கவென்பதாம். இனித் தானேவருமென்பது பாடமாயின், அச்செயல்தானே தமக்கின்னாதனவாய் வருமென உபசாரவழக்காக்கி, ஆக்கம் வருவித்துரைக்க.

(தே - ப - ரை.)—பிறர்க்கு - (துறந்தவர்) மற்றவர்களுக்கு, இன்னா - துன்பந்தருமவைகளை, முற்பகல்-ஒருமுகூர்த்தத்தினது முன்பங்கிலே, செய்யின் - செய்தால், தமக்கு - தங்கட்கு, இன்னா-



துன்பந்தருமவைகள், பின்பகல் - அம்முகூர்த்தத்தினது பின்பங்கிலே, வரும் - (அவர்செய்யாமல்) தாமே வரும்.

௧0. நோயெல்லா நோய்செய்தார் மேலவா நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர்

(பரி-ரை.) எ-து,—இன்னாதனவெல்லாம் பிறிதோருயிர்க்கு இன்னா தன செய்தார்மேலவாம்; அதனால், தம்முயிர்க்கு இன்னாதன வேண்டாதார் பிறிதோருயிர்க்கு இன்னாதன செய்யார், எ-று.

* உவர்ர் லத்து விளைவிதிட்டார்க்கு விளைவும் அதுவே யாகலின், நோயெல்லா நோய்செய்தார் மேலவாமென்றார். இது சொற்பொருட்பின் வருநிலை. இவை யிரண்டுபாட்டானும் அது செய்தார்க்கு வருந்தீங்கு கூறப் பட்டது.

(தெ - ப - ரை) — நோய்களெல்லாம் - துன்பந்தருமவையெல்லாம், நோய்செய்தார்மேலவாம் - (ஒன்றனுயிர்க்குத்) துன்பந் தருமவைகளைச் செய்தவர்மேலனவாம்; (அதனால்) நோயின்மை வேண்டுபவர் - (தம்முயிர்க்குத்) துன்பந்தருமவை யில்லாமையை வேண்டுவோர், நோய்செய்யார் - (ஒன்றனுயிர்க்குத்) துன்பந்தருமவைகளைச்செய்யார்.

## ௩௩-ம் அதிகாரம்—கொல்லாமை.

‡ அஃதாவது, அறிவுடையன முதல் ஓரறிவுடையன ஈறாய உயிர்களைச் சோர்ந்தும் கொல்லுதலைச் செய்யாமை. இது, மேற்கூறிய அறங்களெல் லாவற்றினுஞ் சிறப்புடைத்தாய்க் கூறுதவறங்களையும் அகப்படுத்திநிற்ற லின், இறுதிக்கண் வைக்கப்பட்டது.

க அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும்

சேகனொப்பமணி முதலியவைப்பை, ஈகச.

புல்லும் மரமும் முதலியன பரிசவுணர்வையுடைய ஓரறிவுயிர். இப்பியுஞ் சங்கும் முதலியன அதனோடு இரசவுணர்வையுடைய ஈரறிவுயிர். கறையானும் எறும்பும் முதலியன அவ்விரண்டனோடு நாற்றவுணர்வையுடைய மூவறிவுயிர்கள். தும்பியும் வண்டும் முதலியன அம்மூன்றனோடு உருவவுணர்வையுடைய நாலறிவுயிர்கள். வானவரும் மக்களும் நரகரும் விலங்கும் புள்ளும் முதலியன அந்நான்கனோடு ஓசையுணர்வையுடைய ஐயறிவுயிர்கள்.

## ௩௩-ம் அதி. கொல்லாமை

(பரி-ரை) இ-ள்:—அறஞ்செய்தலாகிய செய்கை யாதென்று வினவின், அஃது ஓருயிரையுங் கொல்லாமையாம், அவற்றைக் கொல்லுதல் பாவசெய்கைகள் எல்லாவற்றையுந் தானே தரும் ஆதலான், எ-று.

அறம்—சாதியொருமை. விலக்கியது ஒழிதலும் அறஞ்செய்தலாமாகலின், கொல்லாமையை அறவினையென்றார். ஈண்டுப் பிறவினையென்றது அவற்றின் விளைவை. கொலைப்பாவம் விளைக்குந் துன்பம் ஏனைப்பாவங்களெல்லாங் கூடியும் விளைக்கமாட்டா என்றவாறு. கொல்லாமைதானே பிறவறங்களெல்லாவற்றின் பயனையுந் தருமென்று மேற்கொண்டுகூறி, அதற்கேது எதிர்மறைமுகத்தாற் கூறியவாறாயிற்று.

(தே - ப - ரை)—அறவினை - அறஞ்செய்தலாகிய செய்கை, யாதெனின் - யாதென்றால், (அது) கொல்லாமை - (ஓருயிரையும்) கொல்லாமையாம், கோறல் - (அவற்றைக்) கொல்லுதல், பிறவினையெல்லாம் - பாவசெய்கைகளெல்லாவற்றையும், தரும் - (தானே) தரும் (ஆதலால்).

---

௨. பகுத்துண்டு பல்லுயி ரோம்புத னூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை.

(பரி - ரை.) இ-ள்:—உண்பதனைப் பசித்தவுயிர்கட்குப் பகுத்துக்கொடுத்து உண்டு பல்வகைப்பட்ட உயிர்களையும் ஓம்புதல் அறநூலுடையார் தொகுத்த அறங்களெல்லாவற்றினுந் தலையாய அறம், எ-று.

பல்லுயிரும் என்னும் முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. ஓம்புதல் சோர்ந்து கொலை வாராமற் குறிக்கொண்டு காத்தல். அதற்குப் பகுத்துண்டல் இன்றியமையாததாகலின், அச்சிறப்புத்தோன்ற, அதனை இறந்தகால வினையெச்சத்தாற் கூறினார். எல்லா நூல்களினும் நல்லனவெ

னுல்) பொய்யாமை - பொய்யோ ராதிருக்கல், அதன்பின் சார - புதன் பின்னேர் நிற்க நன் கல்லாகும்

ச. நல்லா றெனப் படுவது யாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழு நெறி.

(பரி - ரை.) எ-து,—மோக்ஷ வீடு பேறுகட்கு நல்ல நெறியென்று சொல்லப்படுவ யாதென்ற வினவின், அது யாதோருயிரையுங் கொல்லாமையாகிய அறத்தினைக் காக்க கருதும் நெறி, எ-று.

யாதொன்றுமென்றது, ஓரறிவுயிரையும் அகப்படுத்தற்கு. காத்தல் - வழுவாமற் காத்தல். இதனுல் இவ்வறத்தினையுடையதே நன்னெறி யென்று கூறப்பட்டது

(தெ - ப - ரை)—நல்லாறு எனப்படுவது - (சொர்க்கதியும் முத்தியும் பெறுதற்கு) நல்லவழியென்று சொல்லப்படுவது, யாது எனின் - எதுவென்றால், (அது) யாதொன்றும் - யாதோருயிரையும், கொல்லாமை - கொல்லாமையாகிய அறத்தினை சூழும் - (காக்க) நினைக்கும், நெறி - வழியாம்

---

ரு நிலையஞ்சி நீத்தா ருளெல்லாங் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் றலை

கூஉ ௩௩-ம் அதி. கொல்லாமை

(பரி-ரை.) எ-து,—பிறப்புநின்ற நிலையை அஞ்சிப் பிறவாமைப்பொருட்டு மனை வாழ்க்கையைத் துறந்தார் எல்லாருள்ளும் கொலைப்பாவத்தை அஞ்சிக் கொல்லாமையாகிய அறத்தை மறவாதவன் உயர்ந்தவன், எ-று.

பிறப்பு நின்ற நிலையாவது இயங்குவ நிற்பவென்னும் இருவகைப் பிறப்பினும் இனபமென்பதொன்றின்றி உள்ளனவெல்லாந் துன்பமேயாய நிலைமை. துறவு ஒன்றேயாயினும், சமயவேறுபாட்டாற் பலவாம் ஆதலின், நீத்தாருளெல்லா மென்றார். இதனை இவ்வறம் மறவாதவன் உயர்ச்சி கூறப்பட்டது.

(தே - ப - ரை,—நிலை - பிறப்புகின்ற) நிலைக்கு, அஞ்சி - பயந்து, நீத்தாரெல்லாம் - (பிறவாமைப்பொருட்டு) மனை வாழ்க்கையைத் துறந்தவரெல்லாருள்ளும், கொலை - கொலைப் பாவத்திற்கு, அஞ்சி - பயந்து, கொல்லாமை - கொல்லாமையாகிய அறத்தைச் சூழ்வான் - மறவாதவன், தலை - உயர்ந்தோன்.

௬. கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்மேற்
செல்லா துயிருண்ணுங் கூற்று.

(பரி-ரை.) எ-து,—கொல்லாமையை விரதமாக மேற்கொண்டொழுகுவானது வாழ்நாளின்மேல் உயிருண்ணுங் கூற்றுச் செல்லாது, எ-று.

மிகப்பெரிய அறஞ்செய்தாரும் மிகப்பெரிய பாவஞ்செய்தாரும் முறையானன்றி இம்மைதன்னுள்ளே அவற்றின்பயன் அனுபவிப்பரென்னும் அறநூற் றுணிபுபற்றி, இப்பேரறஞ் செய்தான் றானுங் கொல்லப்பட்டான், படானாகவே, அடியிற் கட்டியவாழ்நாள் இடையூறின்றி யெய்துமென்பார், வாழ்நாண்மேற் கூற்றுச்செல்லாதென்றார்: செல்லாதாகவே, காலநீட்டிக்கும், நீட்டித்தால் ஞானம் பிறந்து உயிர் வீடுபெறுமென்பது கருதது. இதனான் அவர்க்கு வரு நன்மை கூறப்பட்டது.

(தே - ப - ரை)—உயிருண்ணுங்கூற்று - உயிரைக்கொண்டு போம் யமனானவன், கொல்லாமை - கொலைசெய்யாமையாகிய விரதத்தை, மேற்கொண்டு—, ஒழுகுவான - நடப்பவனது, வாழ்நாள் மேல் - ஆயுளின்மேல், செல்லாது - செல்லான்.

௭. தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை.

(பரி-ரை.) எ-து,—அது செய்யாவழித் தன்னுயிர் உடம்பினீங்கிப்போமாயினும், தான் பிறிதோரின்னுயிரை அதனுடம்பினீக்குந் தொழிலைச் செய்யற்க, எ-று.

தன்னை அது கொல்லினுந் தான் அதனைக் கொல்லற்கவென்றது, பாவம் கொலையுண்டவழித் தேய்தலும் கொன்றவழி வளர்தலும் நோக்கி. இனித் தன்னுயிர் நீப்பினுமென்பதற்குச் சாந்தியாகச் செய்யாதவழித் தன்னுயிர்போமாயினுமென் றுரைப்பாருமுளர்; பிறர் செய்தலுமாகாமையின், அஃதுரையன்மை யறிக.

(தே - ப - ரை —தான்—, பிறிது - வேறொன்றனது, இன்னுயிர் - இனிதாகியவுயிரை, நீக்கும் - (அதனுடம்பிலிருந்து) நீக்குதலாகிய, வினை - தொழிலை தன்னுயிர - (அதுசெய்யாவிடத்து) தனது உயிரானது நீப்பினும் - (உடம்பைவிட்டு) நீங்கிப்போமாயினும், செய்யற்க - செய்யாதிருக்கக்கடவன்

அ. நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
கொன்றாகு மாக்கங் கடை.

(பரி-ரை.) எ-து,—தேவர்பொருட்டு வேள்விகளைக் கொன்றால் இன்பமிகுஞ்செல்வம் பெரிதாமென்று இல்வாழ்வார்க்குக் கூறப்பட்டதாயினும், துறவானமைந்தார்க்கு உயிரைக் கொல்லவருஞ் செல்வங்கடை, எ-று

இன்பமிகுஞ் செல்வமாவது தாமுந் தேவராய்த் துறக்கத்துச் சென்றெய்துஞ் செல்வம். அது சிறிதாகலானும், பின்னும் பிறத்தற்கேதுவாகலானும், வீடாகிய பேரின்பம் எய்துவார்க்குக் கடையெனப்பட்டது துறக்கமெய்துவார்க்கு ஆமாயினும் வீடெய்துவார்க்கு ஆகா தென்றமையின், விதி விலக்குகள் தம்முண் மலையாமை விளங்கியவாறாயிற்று. இஃது இல்லறம் அனைமைக்குக் காரணம் இவை பிறர்பொருட்டானும் கொல்லற்க என்று கூறப்பட்டது.

(தே - ப - ரை)—நன்றாகும் - (யாகத்திலே கொன்றால்) இன்பமிகுவதாகிய, ஆக்கம் - செல்வமானது, பெரிது - பெரிதாகும், எனினும் - என்று சொல்லப்பட்டதாயினும், சான்றோர்க்கு - (துறவினாலே) நிறைந்தோர்க்கு, கொன்று - (ஓருயிரைக்) கொன்று, ஆகும் - (அதனால்) உண்டாவதாகிய, ஆக்கம் - செல்வமானது, கடை - இழிந்ததாம்

கூ. கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்

புன்மை தெரிவா ரகத்து

(பரி-ரை.) எ-து,—கொலைதொழிலை உடையாராகிய மாந்தர், அத்தொழிலின் இழிமையை அறியுநெஞ்சத்த ரல்லராயினும, அறிவார் நெஞ்சத்துப் புலைத்தொழிலினா, எ-ற

30

## ௩௩-ம் அதி. கொல்லாமை

கொலைவினையரென்றதனன், வேள்விக்கண் கொலையன்மை யறிக. புலைவினையரென்றது தொழிலாற் புலையரென்றவாறு. இம்மைக்கட் இழிமை யெய்துவ ரென்பதாம்.

(தே - ப - ரை.) —கொலைவினையர் ஆகிய - கொலைத் தொழிலையுடையவராகிய மாக்கள் - மனிதர், (அத்தொழிலினது இழிவை அறியாத நெஞ்சினராயிருந்தாலும்), புன்மைதெரிவார் அகத்து - அவ்விழிவை அறிவோரது நெஞ்சில் புலைவினையர் - இழிதொழிலராய்த் தோன்றுவர்.

௩0 உயிருடம்பி னீக்கியா ரென்பர் செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்

(பரி-ரை.) எ-து —சொக்கவாகா நோயுடம்புடனே வறுமை கூர்ந்த இழிதொழில் வாழ்க்கையினையுடையாரை இவர் முற்பிறப்பின்கண் உயிர்களை அவை நின்றவுடம்பினின்று நீக்கினவரென்று சொல்லுவா வினைவிளைவுகளை யறிந்தோர், எ-று.

செல்லாவாழ்க்கை தீவாழ்க்கையெனக்கூட்டுக. செயிருடம்பினராதல் * "அக்கேபோ லங்கை யொழிய விரலழுகித்—துக்கத் தொழுநோ யெழுபவே" என்பதனுனு மறிக. மறுமைகண இவையு மெய்துவ ரென்பதாம். இவை யிரண்டுபாட்டானுங் கொல்வார்க்கு வருந் தீங்கு கூறப்பட்டது.

அருளுடைமைமுதல் கொல்லாமையீறாக சொல்லப்பட்ட இவற்றன்னே சொல்லப்படாத விரதங்களும் அடங்கும்; அஃதறிந்து அடக்கிக்கொள்க. ஈண்டுரைப்பிற் பெருகும்.

பற்றுவிடாதாகலின், இது முன் வைக்கப்பட்டது.

க. நில்லா தவற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை.

(பரி-ரை) எ-து,—நிலையுதல் இலவாகிய பொருள்களை நிலையுதலுடைய வென்று கருதுகின்ற புல்லிய அறிவினையுடைய ராதல் துறந்தார்க்கிழிபு எ-று.

தோற்றமுடையவற்றைக் கேடிலவென்று கருதும் புல்லறிவால் அவற்றின்மேற் பற்றுச்செய்தல் பிறவித்துன்ப நிற்றற் கேதுவாகலின், அது வீடெய்துவார்க்கு இழுக்கென்பது இதனாற் கூறப்பட்டது. இனிப் புல்லறிவாளர் பெரும்பான்மையும் பற்றுச்செய்வது பிறப்பு நிற்றற்கேதுவாகிய செல்வத்தின்கண்ணும் அதனையனுபவிக்கும் யாக்கையின்கண்ணும் ஆகலின், வருகின்ற பாட்டுகளான் அவற்றது நிலையாமையை விதந்து கூறுப.

(தே - ப - ரை.) — நில்லாதவற்றை - நிலையில்லாதவைகளை, நிலையின என்று - நிலையுடையவையென்று, உணரும் - நினைக்கின்ற, புல்லறிவு ஆண்மை - அற்பபுத்தியை யுடையவராயிருக்கை, கடை - (துறந்தார்க்கு) இழிவு.

௨. கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று.

## ௩௪-ம் அதி. நிலையாமை

(பரி-ரை.) எ-து,—ஒருவன் மாட்டுப் பெரிய செல்வம்வருதல் கூத்தாடுதல் செய்கின்ற அரங்கின்கட் காண்போர்குழாம் வந்தாற்போலும்; அதனது போகலும் அக்கூத்தாட்டு முடிந்தவழி அக்குழாம் போயினாற்போலும், எ-று.

பெருஞ்செல்வமெனவே, சிறுசெல்வமும் அடங்கிற்று. போக்குமென்ற எச்சவும்மையான், வரவென்பது பெற்றாம். அக்குழாம் கூத்தாட்டுக் காரணமாக அரங்கின்கட் பலதிறத்தாருமேவந்து, அக்காரணம் போயவழித்தானும் போமாறுபோல, செல்வமும் ஒருவனல்வினை காரணமாக அவன் மாட்டுப் பலதிறத்தாருமேவந்து, அக்காரணம்போயவழித் தானும் போமென்றதாயிற்று.

(தே - ப - ரை)—பெருந்செல்வம் - (ஒருவனிடத்து) பெரிய செல்வம்வருதல், கூத்தாட்டு - கூத்தாடுதல்செய்கின்ற, அவை - சபையினிடத்தே, குழாத்து அற்று - (காண்போர்) கூட்டம் வருதல்போலும். போக்கும் - (அச்செல்வம்) போகுதலும், அது - அக்கூட்டமானது, விளிந்தது அற்று - (அக்கூத்தாட்டு முடிந்தவிடத்துப்) போகுதல்போலும்.

௩. அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றா
லற்குப வாங்கே செயல்.

(பரி-ரை) எ-து,—நில்லாத இயல்பினையுடைத்துச் செல்வம்; அதனைப் பெற்றால் அதனாற் செய்யப்படும் அறங்களை அப்பெற்றபொழுதேசெய்க, எ-று. அல்காவென்பது திரிந்துநின்றது. ஊழ்வழியல்லது முயற்சியாற் பெறப்படாமையின் அது பெற்றால் என்றும், அஃதுநில்வழி நில்லாமையின் ஆங்கேயென்றுங் கூறினார். அதனாற்செய்யப்படும் அறங்களாவன:—பயனோக்காது செய்யும் கடவுட்பூசையும், தானமும் முதலாயின. அவை ஞானவேதுவாய் வீடுபயத்தலின், அவற்றை அற்குபவென்றும் செய்கவென்றுங்கூறினார். இவை யிரண்டுபாட்டானும் செல்வநிலையாமை கூறப்பட்டது.

(தே - ப - ரை)—செல்வம் செல்வமானது, அற்கா - நிலையாத, இயல்பிற்று - இயல்பையுடையதாகும்; அதுபெற்றால்-அச்செல்வத்தைப்பெற்றால், அற்குப - (அதனாலேசெய்யப்படும்) அறங்களை, ஆங்கே-பெற்றபொழுதே, செயல் - செய்யக்கடவன்

---

௪. நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்.

(பரி-ரை.) எ-து,—நாளென்று அறுக்கப்படுவதொரு கால வரையறை போலத் தன்னைக் காட்டி ஈர்ந்து செல்கின்ற வாளினது வாயது உயிர், அஃதுணர்வாரைப் பெறின், எ-று.

## ௩௪-ம் அதி. நிலையாமை

காலமென்னும் அருவப்பொருள் உலகியல் நடாத்தற்பொருட்டு ஆதித்தன் முதலிய அளவைகளாற் கூறப்பட்டதாக வழங்கப்படுவதல்லது தானாகக்

கூறுபடாமையின் நாளென வொன்றுபோலென்றும், அது தன்னை வாளென்று உணரமாட்டாதார் நமக்குப் பொழுது போகாநின்றதென்று இன்புறுமாறு நாளாய் மயக்கலின் காட்டியென்றும், இடைவிடாது ஈர்தலான் வாளின் வாயதென்றும், அஃதீர்கின்றமையை உணர்வார் அரியராகலின் உணர்வார்ப்பெறி னென்றுங் கூறினர். உயிரென்னுஞ் சாதியொருமைப் பெயர் ஈண்டு உடம்பின்மே னின்றது, ஈர்ப்படுவது அதுவேயாகலின். வாளென்பது ஆகுபெயர். இனி இதனை நாளெனப்படுவதொரு பொருள்போலத் தோன்றி உயிரை யீர்வதொரு வாளாமென வுரைப்பாருமுளர் எனவென்பது பயனின்றி இடைச்சொல்லாகலானும், ஒன்றுபோற்காட்டி யென்பதற்கு ஓர் பொருட்சிறப் பின்மையானும், அது வென்பது குற்றியலுகரமன்மை யானும், அஃதுரையன்மையறிக.

(தெ - ப - ரை)—உயிர் - உயிரானது நாளென - நாளென்று அளவு செய்யப்படுவதாகிய, ஒன்றுபோல - ஒருகாலவளவு போல், காட்டி - (தன்னைக்) காட்டி ஈரும் - அறுத்துச் செல்லுகின்ற வாளது - வாளினது வாயினிடத்து, உணர்வார்ப்பெறின் - (அது) அறிவாரைப்பெறின்.

---

௫ நாச்செற்று விக்குண்மேல் வாராமு னல்வினை
மேற்சென்று செய்யப் படும்

(பரி-ரை.) எ-து,—பேசாதவண்ணம் நாவையடக்கி விக்குள் எழுவதற்கு முன்னே வீட்டிற்கேதுவாகிய அறம் விரைந்து செய்யப்படும், எ-று.

மேனோக்கிவருதல் இருமலினாகலானும், வந்துழிச் செய்தலேயன்றிச் சொல்லுதலு மாகாமையானும் வாராமுனென்றும், அதுதான் இன்னபொழுது வருமென்பது இன்மையின் மேற்சென்றென்றுங் கூறினர். மேற்சேறல் - முந்துதல். நல்வினை செய்யுமாறன்மேல் வைத்து நிலையாமை கூறியவாறு.

(தெ - ப - ரை. —நாச்செற்று - (பேசாதிருக்கும்படி) நாவை அடக்கி, விக்குள் - விக்கலானது, மேல்வாராமுன் - எழுவதற்கு முன்னே, நல்வினை - (மோக்ஷத்துக்கு ஏதுவாகிய) அறமானது, மேற்சென்று - விரைந்து, செய்யப்படும் - செய்யத்தகும்.

---

௬. நெருநல் உளனொருவன் இன்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு

(பரி-ரை.) எ-து,—ஒருவன் நெருநலுளனாயினான் அவனே இன்றில்லையாயினானென்று சொல்லும் நிலையாமை மிகுதியுடைத்து இவ்வுலகம், எ-று.

## ௩௪-ம் அதி· நிலையாமை

ஈண்டு உண்மை பிறத்தலையும், இன்மை இறத்தலையும் உணர்த்தி நின்றன. அவை பெண்பாற்கும் உளவாயினும், சிறப்புப்பற்றி ஆண்பாலையே கூறினார். இந்நிலையாமையே உலகின் மிக்கதென்பதாம்.

(தெ-ப-ரை.)—இவ்வுலகு-இந்த வுலகமானது, ஒருவன்—, நெருநல் - நேற்று, உளன் - உளனாயினான் [இருந்தவனென்றபடி]; இன்று - (அவனே) இன்றைக்கு, இல்லை - இல்லையாயினான் [இறந்தானென்றபடி], என்னும் பெருமை - என்று சொல்லும் (நிலையாமையின்) மிகுதியை, உடைத்து - உடையதாயிருக்கின்றது.

---

௭. ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல.

(பரி-ரை.) எ-து,—ஒருபொழுதளவும் தம்முடம்பும் உயிரும் இயைந்திருத்தலைத் தெளியமாட்டார், மாட்டாதிருந்தும், கோடியளவுமன்றி அதனினும் பலவாய நினைவுகளை நினைப்பர் அறிவிலாதார், எ-று.

இழிவுசிறப்பும்மையாற் பொழுதென்பது ஈண்டுக் கணத்தின்மேனின்றது. காரணமாகிய வினைப்பன்மையே வாழ்தற்கும் அளவாதலின், அஃது அறியப்படாதாயிற்று. பலவாய நினைவுகளாவன — பொறிகளான் நுகரப்படும் இன்பங்கள் தமக்குரியவாமாறும், அதற்குப் பொருள் துணைக்காரணமாமாறும், அது தம்முயற்சியான் வருமாறும், அவற்றைத் தாமுயலுமாறும், அவற்றிற்கு வருமிடையூறுகளும், அவற்றை நீக்குமாறும், நீக்கி அப்பொருள் கடைக்கூட்டுமாறும், அதனைப் பிறர்கொள்ளாமற் காக்குமாறும், அதனான் நட்டாரை யாக்குமாறும், செற்றாரை யழிக்குமாறும், தாம அவ்வின்பங்கள் நுகருமாறும் முதலாயின. அறிவிலாரது இயல்பின்மேல் வைத்து நிலையாமை கூறியவாறு. ஏனைக் கருதுப வென்பதனை அஃறிணைப்

பன்மைப்பெயராக்கி யுரைப்பாருமுளர்.

(தே - ப - ரை) — ஒருபொழுதும் - அறிவில்லாதவர்) ஒருபொழுதளவும், வாழ்வது - தம்முடம்பும் உயிரும் கூடியிருக்கையை, அறியார் - அறியமாட்டார்; (மாட்டாதிருந்தும்) கோடியும் அல்ல - கோடியளவுமன்றி, பல - (அதனினும்) பலவாகிய நினைவுகளை, கருதுப - நினையாநிற்பர்.

௮. குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
யுடம்போ டுயிரிடை நட்பு.

(பரி-ரை.) எ-து — முன் தனியாத முட்டை தனித்துக் கிடப்ப அதனுளிருந்த புள்ளுப் பருவம்வந்துழிப் பறந்துபோய தன்மைத்து உடம்பிற்கும் உயிர்க்கு முளதாய நட்பு, எ-று.



தனித்தொழிய வென்றதனுன், முன் தனியாமை பெற்றும், அஃதாவது கருவுந்தானும் ஒன்றாய்ப்பிறந்து வேறுந்தனையும் அதற்கு ஆதாரமாய் நிற்றல்; அதனால் அஃது உடம்பிற் குவமையாயிற்று; அதனுள் வேற்றுமையின்றி நின்றே பின் புகாமற்போகலின், புள் உயிர்க்குவமையாயிற்று. முட்டையுட் பிறப்பன பிறவுமுளவேனும், புள்ளேயே கூறினார், பறந்துபோதற்றொழிலான் உயிரோடொப்புமை யெய்துவது அதுவேயாகலின். * நட்பென்றது ஈண்டுக் குறிப்புமொழியாய் நட்பின்றிப்போத லுணர்த்திநின்றது. சேதனமாய் அருவாய் நித்தமாய உயிரும், அசேதனமாய் உருவாய் அநித்தமாய உடம்பும் தம்முண் மாறுகலின், வினைவயத்தாற் கூடியதல்லது நட்பிலவென்பதறிக. இனிக்குடம்பை யென்பதற்குக் கூடென்று உரைப்பாருமுளர் அது புள்ளுடன்தோன்றுமையானும், அதன்கண் அதுமீண்டு புகுதலுடைமையானும், உடம்பிற்கு உவமையாகாமை யறிக.

(தே - ப - ரை — உடம்போடு - உடம்புடனே, உயிரிடை - உயிருக்கு உண்டாகிய, நட்பு-சினேகமானது, குடம்பை-(முன்னே தனியாதிருந்த) முட்டையானது, தனித்து ஒழிய - தனித்துக்

கிடக்க, புள்-(அதனுள்ளிருந்த பறவை, பறந்தற்று-(பருவம் வந்தவிடத்து) பறந்துபோந் தன்மையை யுடையதாம்.

---

௩௯. உறங்கு வதுபோலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

(பரி-ரை.) எ-து,—ஒருவனுக்குச் சாக்காடு வருதல் உறக்கம் வருதலோ டொக்கும்; அதன்பின் பிறப்பு வருதல் உறங்கி விழித்தல் வருதலோ டொக்கும், எ-று.

உறங்குதலும் விழித்தலும் உயிர்கட்கு இயல்பாய்க் கடிதின் மாறிமாறி வருகின்றாற்போலச் சாக்காடும் பிறப்பும் இயல்பாய்க் கடிதின் மாறிமாறி வருமென்பது கருத்து. நிலையாமைய நிலைபெறுமாறு அறிவித்தற்குப் பிறப்பும் உடன்கூறப்பட்டது.

(தே-ப-ரை.)—சாக்காடு-(ஒருவனுக்கு) மரணம் வருதல், உறங்குவதுபோலும்-தூக்கம் வருதல்போலும்; பிறப்பு-(அதன் பின்னே) பிறப்புவருதல், உறங்கி விழிப்பதுபோலும்-தூங்கிவிழித்தல் வருதல்போலும்.

* இவ்வாறு பெயரடியாகத் தோன்றிய குப்பையை வடநூலார் அபிராமூலத்தொனி யென்றும், விருத்தலக்கண யென்றுங் கூறுவர்.



௪௦. புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட்
டுச்சி லிருந்த வுயிர்க்கு.

(பரி-ரை.) எ-து,—வாதமுதலியவற்றின் இல்லாய உடம்புகளுள் ஒதுக் கிருந்தே போந்த உயிருக்கு எஞ்ஞான்றும் இருப்பதோரில் இதுகாறும் அமைந்ததில்லை போலும், எ-று.

அந்நோய்கள் இருக்க அமைந்த ஞான்று இருந்தும், வெகுண்ட ஞான்று போயும், ஒருடம்பினும் நிலைபெறாது வருதலால், துச்சிலிருந்தவென்றார். பின்

புறப்பட்டாது புக்கேவிடமில் அமைந்ததாயின், பிறர் இற்களுள் ஒதுக்கிரா தென்பதாம்; ஆகவே, உயிரோடு கூடிநிற்பதோர் உடம்பும் இல்லையென்பது பெறப்பட்டது. இவை யேழுபாட்டானும், முறையே யாக்கைகட்கு வரைந்த நாள் கழிகின்றவாறும், கழிந்தால் உளதாம் நிலைமையும், அவை ஒரோவழிப் பிறந்த அளவிலே இறந்தலும், ஒரு கணமாயினும் நிற்குமென்பது தெளியப் படாமையும், உயிர் நீங்கியவழிக் கிடக்குமாறும், அவற்றிற்கு இறப்பும் பிறப்பும் மாறிமாறி வருமாறும், அவைதாம் உயிர்க்குரிய அன்மையுமென்று, இவ்வாற்றால் யாக்கை நிலையாமை கூறியவாறு கண்டுகொள்க.

(தே - ப - ரை.)—உடம்பினுள் - (வாதமுதலானவைகளது வீடுகளாகிய) உடம்புகளுள், தாசில இருந்த - ஒதுக்குக்குடியிருந்து வந்த, உயிர்க்கு - உயிர்களுக்கு, புக்கில் - என்றைக்கும் இருப்பதாகிய ஒருவீடானது, அமைந்ததுஇன்றுகொல் - (இதுவரையில்) அமைந்ததில்லைபோலும்.

## ௩௫-ம் அதிகாரம்—துறவு.

அஃதாவது புறமாகிய செல்வத்தின்கண்ணும் அகமாகிய யாக்கையின் கண்ணும் உளதாய பற்றினை, அவற்றது நிலையாமை நோக்கி, விடுதல். அதிகார முறைமையும இதனானே விளங்கும்.

க. யாதனின் யாதனி னீங்கியா னோதை
லதனி னதனி னிலன்.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் யாதொருபொருளின் யாதொருபொருளின் நீங்கினன் அவன் அப்பொருளால் அப்பொருளால் துன்பமெய்துதல்

அடுக்குகள் பன்மை குறித்துநின்றன. நீங்குதல் - துறத்தல். துன்பமென்றது இம்மைக்கண் அவற்றைத் தேடுதலானும், காத்தலானும், இழத்தலானும் வருவனவும், மறுமைக்கண் பாவத்தான் வருவனவும் ஆய இருவகைத் துன்பங்களையுமாம். எல்லாப்பொருளையும் ஒருங்கே விடுதல்

தலை, அஃதன்றி ஒரோவொன்றாக விடினும் அவற்றான் வருந் துன்பம் இலனா மென்பது கருத்து.

(தே - ப - ரை)—பாதனின்பாதனின் - (ஒருவன்) யாதொரு பொருளின்யாதொருபொருளின், நீங்கியான்-நீங்கினான், அதனின் அதனின் - (அவன்) அப்பொருளினாலே அப்பொருளினாலே, நோதல் - துன்பம் அனுபவித்தலை, இலன் - உடையவனாகான்.

௨. வேண்டி னுண்டாகத் துறக்க துறந்தபி
னீண்டியற் பால பல.

(பரி-ரை.) எ-து,—எல்லாப்பொருள்களையுந் துறத்தலால் ஒருவர்க்கு இம்மைக்கண்ணே உளவாம் முறைமையையுடைய இன்பங்கள் பல; அவ் வின்பங்களை வேண்டின், அவற்றைக் காலம் பெறத் துறக்க, எ-று.

அவ்வின்பங்களாவன—அப்பொருள்கள் காரணமாக மனமொழிமெய்கள் அலையாது நிற்றலானும், அவை நன்னெறிக்கட்சேறலானும் வருவன. இளமைக்கண்துறந்தான் அவற்றை நெடுங்காலம் எய்துமாகலின், உண்டாகத் துறக்கவென்றார். இன்பங்களென்பதும காலமென்பதும் வருவிக்கப்பட்டன. இம்மைக்கண் துன்பங்கள் இலவாதலேயன்றி இன்பங்கள் உளவாதலும் உண்டென்பதாம்.

(தே - ப - ரை)—துறந்தபின் - (எல்லாப் பொருள்களையும்) துறந்தபின், ஈண்டு - (ஒருவனுக்கு) இப்பிறப்பிலே, இயற்பால - உண்டாகும் முறைமையையுடைய இன்பங்கள், பல - பலவாம்; வேண்டின் - (அவ்வின்பங்களை) வேண்டினால், உண்டாக - (காலம்) உண்டாக, துறக்க - (அப்பொருள்களைத்) துறக்கக்கடவன்.

---

௩. அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு.

(பரி-ரை.) எ-து,—வீடெய்துவார்க்குச் செவி முதலிய ஐம்பொறிகட்கு உரியவாய ஓசை முதலிய ஐம்புலன்களையுங் கெடுத்தல்வேண்டும்; கெடுக்குங்கால், அவற்றை நுகர்தற்பொருட்டுத் தாம் படைத்த பொருள் முழுதையும்

ஒருங்கே விடுதல்வேண்டும், எ-று.

புலமென்றது அவற்றை நுகர்தலை. அது மனத்தைத் துன்பத்தானும் பாவத்தானும் அன்றி வாராத பொருள்கண்மேல் அல்லது வீட்டு நெறியாகிய யோகஞானங்களிற் செலுத்தாமையின், அதனை அடல்வேண்டுமென்றும், அஃது அப்பொருள்கண்மேற்செல்லின் அந்நுகர்ச்சி விறகுபெற்ற தழல்

21



போல் முறுகுவதல்லது அடப்படாமையின், வேண்டியவெல்லா மொருங்கு விடல்வேண்டுமென்றுங் கூறினர்.

(தே - ப - ரை)—ஐந்தன் - (முத்தியை அடைவோர்க்கு) செவி முதலாகிய ஐப்பொறிகளுக்குரிய, புலத்தை - ஓசை முதலாகிய ஐம்புலன்களையும், அடல்வேண்டும் - கெடுத்தல்வேண்டும்; வேண்டிய எல்லாம் - கெடுக்கும்போது அப்புலன்களை அனுபவித்தற்பொருட்டுத் தாமடைந்த பொருள்களையெல்லாம், ஒருங்கு - ஒருமிக்க, விடல்வேண்டும் - விட்டுவிடல்வேண்டும்.

௪. இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடைமை
மயலாகு மற்றும் பெயர்த்து.

(பரி-ரை.) எ-து,—பற்றப்படுவதொரு பொருளும் இல்லாமை தவஞ் செய்வார்க்கு இயல்பாம்; அஃதன்றி, ஒன்றாயினும் உடைமை அத்தவத்தைப் போக்குதலான், மீண்டும் மயக்குதற்கேதுவாம், எ-று.

இழிவுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. நோன்பென்பதூஉம், மயலென்பதூஉம் ஆகுபெயர். பெயர்த்தலான் என்பது திரிந்துநின்றது. நோன்பைப் பெயர்த்தலானென வேற்றுமைப்படுத்திக் கூட்டுக. எல்லாப்பொருள்களையும்விட்டு ஒருபொருளை விடாதவழியும், அது சார்பாக விட்டனவெல்லாம் மீண்டுவந்து தவத்திற் கிடையீடாய் மனக்கலக்கஞ் செய்யுமென்பது கருத்து. இவை நான்குபாட்டானும் எனதென்னும் புறப்பற்று விடுதல் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—நோன்பிற்கு - தவஞ்செய்வோர்க்கு, ஒன்று - (பற்றப்படுவது) ஒருபொருளும், இன்மை - இல்லாதிருக்கை, இயல்பு ஆகும் - இயல்பாம்; உடைமை - (ஒன்றாயினும்) உடைமை, பெயர்த்து - (அத்தவத்தைப்) போக்குதலால், மற்றும் - மறுபடியும், மயல் ஆகும் - மயக்கத்துக்கு ஏதுவாகும்.

---

௫. மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை.

(பரி-ரை.) இ-ள்.—பிறப்பறுத்தலை மேற்கொண்டார்க்கு அதற்குக் கருவியாகிய உடம்பும் மிகையாம்; ஆனபின், அதற்குமேலே இயைபில்லனவுஞ் சில தொடர்ப்பாடு உளவாதல் என்னை, எ-று.

உடம்பென்றபொதுமையான் * உருவுடம்பும், அருவுடம்புங் கொள்ளப்படும். அவற்றுள், அருவுடம்பாவது பத்துவகை இந்திரியவுணர்வோடும்

* உருவுடம்பு - தூலசரீரம், அருவுடம்பு - சூக்குமசரீரம்.



ஐவகை வாயுக்களோடும் காமவினை விளைவுகளோடுங் கூடிய மனம்; இது நுண்ணுடம்பெனவும்படும். இதன்கட்பற்று நிலையாமை உணர்ந்த துணையான் விடாமையின், விடுதற்குபாயம் முன்னர்க்கூறிய இவ்வுடம்புகளால் துன்பம் இடையறாது வருதலை உணர்ந்து, இவற்றான் ஆய கட்டினை இறைப்பொழுதும் பொறாது வீட்டின்கணே விரைதலின், உடம்புமிகை யென்றார். இன்பதுன்பங்களான் உயிரோடு ஒற்றுமையெய்துதலின், இவ்வுடம்புகளும் யானெனப்படும். இதனான் அகப்பற்றுவிடுதல் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—பிறப்பு அறுக்கல் உற்றார்க்கு - பிறவியை நீக்குமுயற்சியை மேற்கொண்டவருக்கு, உடம்பும் - (அதற்கு உதவியாகிய) உடம்பும், மிகை - அதிகமாம்; (ஆனபின்), மற்றும் - அதற்குமேலும், தொடர்ப்பாடு - (சம்பந்தமில்லாதனவையுஞ் சில பொருள்கள்) பற்றப்படுதல், எவன் - என்னைக்கு.

௬. யானெனதென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்.

(பரி-ரை.) இ-ள்.—தானல்லாத உடம்பை யானென்றுந் தன்னோடியைபில்லாத பொருளை யெனதென்றுங் கருதி, அவற்றின்கட் பற்றுச்செய்தற் கேதுவாகிய மயக்கத்தைக் கெடுப்பான் வானோர்க்கும் எய்தற்கரிய வீட்டுலகத்தை யெய்தும், எ-று.

மயக்கம்-அறியாமை. அதனைக் கெடுத்தலாவது தேசிகராற் பெற்ற உறுதிமொழிகளானும், யோகப்பயிற்சியானும், அவை யானெனது அன்மை தெளிந்து, அவற்றின்கட் பற்றை விடுதல். சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. இதனான் இவ்விருவகைப் பற்றையும் விட்டார்க்கே வீடுளதென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—யான் எனது என்னும் - (தானல்லாத உடம்பை) யானென்றும் (தன்னோடு சம்பந்தமில்லாத பொருளை) எனதென்றும் நினைத்து அவைகளிலே பற்றுச்செய்தற்கு ஏதுவாகிய, செருக்கு - மயக்கத்தை, அறுப்பான் - கெடுப்பவன், வானோர்க்கு - தேவர்க்கும், உயர்ந்த - அடைதற்கரிதாகிய, உலகம் - முத்தியுலகத்தில், புகும் - செல்லுவான்.

௭. பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு.

(பரி-ரை.) இ-ள்.—இருவகைப் பற்றினையும் இறுகப்பற்றி விடாதாரைப் பிறவித்துன்பங்கள் இறுகப்பற்றி விடா, எ-று.

கஙசு

## ௩௫-ம் அதி. துறவு

இறுகப்பற்றுதல் - காதல்கூர்தல். விடாதவர்க்கென்பது வேற்றுமை மயக்கம். இதனால் இவை விடாதார்க்கு வீடில்லையென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—பற்றினை - (இருவகைப்) பற்றுக்களையும், பற்றி - இறுகப்பற்றி, விடாதவர்க்கு - விடாதவரை, இடும்பைகள் - துன்பங்கள், பற்றி - இறுகப்பற்றி, விடா-விட்டு நீங்காவாம்.

௮. * தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்

(பரி-ரை.) எ-து,—முற்றத்துறந்தார் வீட்டினைத் தலைப்பட்டார்; அங்ஙனந் துறவாதார் மயங்கிப் பிறப்பாகிய வலையுட்பட்டார், எ-று.

முற்றத்துறத்தலாவது பொருள்களையும், இருவகை உடம்பினையும் உவர்த்துப்பற்றற விடுதல். அங்ஙனந் துறவாமையாவது அவற்றுள் யாதானு மொன்றின்கட் சிறிதாயினும் பற்றுச்செய்தல். துணிவுபற்றித் தலைப்பட்டாரென்றும், பொய்ந்நெறிக்கணடே பிறப்புவலையு ளகப்படுதலின், மயங்கியென்றுங் கூறினர்.

(தே-ப-ரை.)—தீரத்துறந்தார் - முழுதுந்துறந்தவர், தலைப்பட்டார் - (முத்தியை) அடைந்தவராவார், மற்றையவர் - அப்படித் துறவாதவர், மயங்கி - மருண்டு, வலைப்பட்டார் - (பிறப்பாகிய) வலையில் அகப்பட்டவராவார்.

௯. பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும்

(பரி-ரை.) எ-து,—ஒருவன் இருவகைப்பற்றும் அற்றபொழுதே, அப்பற்றறுதி அவன்பிறப்பையறுக்கும்; அவையறாதபொழுது அவற்றாற் பிறந்திறந்துவருகின்ற நிலையாமை காணப்படும், எ-று.

---

* இவ்வருமைத் திருக்குறளைச் சாந்நான்முகனொருவராகிய செயற்றவன்குடி உபாதி வெகாரியா ரெஞ்சவிடுதூதில் "நேருங்கா-துணைமொழிய வறவிலவை யென்னுந்-தன்னை யறிவித் தணிபுரிவ - முன்னை - தலைப்பட்டார் தீரத்துறந்தார் மயங்கி - வலைப்பட்டார் மற்றையவரென்று - நிலைமிகுதிமின - மெய்வைப் புலமைத் திருவள்ளுவ ருரைத்த - மெய்யைத சொல்லை விரும்பார - மெய் ஈங்கு - மாவது செய்தல கவாவழியைத் தப்பா மத் - பாவமெனப் பெணவட் பரப்பழிதுப் - பூவையாகம - கண்யவியிறப்பட்டுக கலவிக் கவியின்றங் - குன்னைக்கேபுணாச்சி பேசாபற - மீண்மையிற - துவிற்கெடுமை பல பிதற்றி ஈடோறுஞ்-சாவிற பிறபிற்றலைப்பட்டிங் - காவிங்கே - நித்துயவகை பாராய் நிலையான நெஞ்சமே பொறியிலுடன மேனே புரலககோ" எனவெடுத்தருளிச்செய்தார் இவ்வெஞ்சவிடுதூதாசிரியர்நாதய பதிறுவாகிறு மென்று.

# கூசு-ம் அதிகாரம்—மெய்யுணர்தல்.

அஃதாவது பிறப்பு வீடுகளையும், அவற்றின் காரணங்களையும், விபரீத ஐயங்களான் அன்றி உண்மையான் உணர்தல். இதனை வடநூலார் தத்துவ ஞானமென்ப. இது மெய்யுணர்ந்தான் பற்றினைப் பற்றியவழி உளதாவதாகலின், அக்காரணவொற்றுமைபற்றித் துறவின்பின் வைக்கப்பட்டது.

அறநெறியைப் [illegible] பற்றே-திருவாய்மொழி. உ-ம் திருப்பதிகம். [illegible]

௩௫௧ கூசு-ம் அதி. மெய்யுணர்தல்

க. பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு
மருளானு மாணாப் பிறப்பு.

(பரி-ரை.) இ-ள்,—மெய்ப்பொருளல்லவற்றை மெய்ப்பொருளென் றுணரும் விபரீதவுணர்வானே உளதாம் இன்பமில்லாத பிறப்பு, எ-று.

அவ்விபரீதவுணர்வாவது மறுபிறப்பும், இருவினைப்பயனும், கடவுளும் இல்லையெனவும், மற்றும் இத்தன்மையவுஞ்சொல்லும் மயக்கநூல் வழக்குகளை மெய்ந்நூல் வழக்கெனத் துணிதல். குற்றியை மகனென்றும், இப்பியை வெள்ளியென்றும், இவ்வாறே ஒன்றனைப் பிறிதொன்றாகத் துணிதலும் அது. மருள், மயக்கம், விபரீதவுணர்வு, அவிச்சையென்பன ஒருபொருட்கிளவி. நரகர், விலங்கு, மக்கள், தேவரெனும் நால்வகைப் பிறப்பினும் உள்ளது துன்பமேயாகலின், மாணாப்பிறப்பென்றார். இதனாற் பிறப்புத் துன்பமென்பதூஉம், அதற்கு முதற்காரணம் அவிச்சையென்பதூஉம் கூறப்பட்டன.

(தே-ப-ரை.)—பொருள் அல்லவற்றை - மெய்ப்பொருள்களல்லாதவைகளை, பொருள் என்று - மெய்ப்பொருள்களென்று, உணரும் - அறிகின்ற, மருளான் - விபரீதஞானத்தினால், மாணாப்பிறப்பு - மாட்சிமைப்படாத பிறவி [இன்பமில்லாத பிறவியென்றபடி], ஆம் - உண்டாகும்

உ. இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.

பிறர்க்குக் காரணமாதல் கூறப்பட்டது.

(தே-ப-ரை)—ஐயத்தினின்றும் - சந்தேகத்தினின்று நீங்கி, தெளிந்தார்க்கு - மெய்ப்பொருளை யுணர்ந்தவர்க்கு, வையத்தின் - (அடைந்திருக்கின்ற) இவ்வுலகத்தினும், வானம் - (அடையக் கடவதாகிய) வீட்டுலகம், நணியது - அடைந்ததாகவே, உடைத்து - உடையதாம்

---

௪ ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு

(பரி-ரை.) எ-து,—செல்லப்படுகின்ற புலன்கள் வேறுபாட்டான் ஐந்தாகியவுணர்வு அவற்றைவிட்டுத் தம்வயத்ததாய வழியும், அதனாற் பயனில்லையாம் மெய்யினை யுணர்தலில்லார்க்கு, எ-று.

ஐந்தாகியவுணர்வு மனம், அஃதெய்தலாவது மடங்கி யொருதலைப்பட்டுத் தாரணைகைகூடிற்றாக அங்ஙனமானவழியும் வீடு பயவாமையின், பயமின்றென்றார் சிறப்பும்மை எய்துதற்கருமை விளக்கிநின்றது. இவையிரண்டுபாட்டானும் மெய்யுணர்வுடையார்க்கே வீடுளதென மெய்யுணர்வின் சிறப்புக் கூறப்பட்டது

(தே-ப-ரை)—மெய்யுணர்வு இல்லாதவர்க்கு - மெய்யை அறிதல் இல்லாதவர்க்கு, ஐந்து உணர்வு - (ஓசை ஊறு ஒளி சுவை நாற்றம் இவைஐந்து புலன்களினும் செல்லுகின்ற) ஐந்தாகிய உணர்வு, எய்தியக்கண்ணும் - (அப்புலன்களைவிட்டுத்) தமக்கு வசப்பட்டவிடத்தும், பயம் - (அதனாலே) பிரயோசனம், இன்று - இல்லை.

---



## ௩௬-ம் அதி. மெய்யுணர்தல்

௫. எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

(பரி-ரை.) எ-து,—யாதொருபொருள் யாதோரியல்பிற்றாய்த் தோன்றினும் அத்தோன்றியவாற்றைக் கண்டொழியாது அப்பொருளின்கணின்று

மெய்யாகிய பொருளைக் காண்பதே மெய்யுணர்வாவது. எ-று.

பொருள்தோறும் உலகத்தார் கற்பித்துக்கொண்டு வழங்குகின்ற கற்பனைகளைக் கழித்து, நின்ற உண்மையைக் காண்பதென்றவாறு. அஃது ஆமாறு— 'காரசேரமான் யானைக்கட்சேஎய் மாந்தரஞ்சேரலிரும்பொறை' என்றவழி அரசனென்பதோர் சாதியும், சேரமானென்பதொரு குடியும், வேழநோக்கினையுடையானென்பதோர் வடிவும், சேயென்பதோரியற்பெயரும், மாந்தரஞ்சேரலிரும்பொறையென்பதோர் சிறப்புப்பெயரும், ஒரு பொருளின்கட் கற்பனையாகலின், அவ்வாறுணராது நிலமுதல் உயிரீறாகிய தத்துவங்களின் தொகுதியெனவுணர்ந்து, அவற்றை நிலமுதலாகத்தத்தம் காரணங்களுள் ஒடுக்கிக்கொண்டு சென்றாற் காரணகாரியங்கள் இரண்டுமின்றி முடிவாய் நிற்பதனை யுணர்தலாம். எப்பொருளென்ற பொதுமையான் இயங்குதிணையும் நிலைத்திணையுமாகிய பொருள்களெல்லாம் இவ்வாறே யுணரப்படும். இதனான் மெய்யுணர்வினது இலக்கணங் கூறப்பட்டது.

(தே-ப-ரை.)—எப்பொருள் - யாதொருபொருள், எத்தன்மைத்தாயினும் - யாதொரியல்புடையதாய்த் தோன்றினும், (அத்தோன்றிய விதத்தைக் கண்டு விடாமல்), அப்பொருள் - (தோன்றிய) அப்பொருளிடத்திருக்கும், மெய்ப்பொருள் - மெய்யாகிய பொருளை, காண்பது - அறிவது, அறிவு - மெய்யறிவாம்.

---

சுஉ. கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.

(பரி-ரை.) எ-து,—இம்மக்கட் பிறப்பின்கண்ணே உபதேசமொழிகளை அனுபவமுடைய தேசிகர்பாற் கேட்டு அதனான் மெய்ப்பொருளை யுணர்ந்தவர் மீண்டு இப்பிறப்பின்கண் வாராத நெறியையெய்துவர், எ-று.

கற்றென்றதனால் பலர்பக்கலினும் பலகாலும் பயிறலும், ஈண்டென்றதனால் வீடுபேற்றிற்குரிய மக்கட்பிறப்பினது பெறுதற்கருமையும் பெற்றாம். மீண்டுவாராநெறி வீட்டுநெறி: வீட்டிற்கு நிமித்தகாரணமாய முதற்பொருளை உணர்தற்கு உபாயம் மூன்று; அவை * கேள்வி, விமரிசம், பாவனையென்பன. அவற்றுள் கேள்வி இதனாற் கூறப்பட்டது.

---

* கேள்வியெனினும், சிரவணமெனினும் ஒக்கும். விமரிசமெனினும், சிந்தனையெனினும், மனனமெனினுமொக்கும். பாவனையெனினும், தெளிதலெனினும், நிதித்யாசனமெனினு மொக்கும்.

(தெ - ப - ரை.)—ஈண்டு - இம்மையிலே, கற்று - (உபதேசத்தை ஞானசாரியரிடத்தே) கேட்டு, மெய்ப்பொருள் - (அதனால் உண்மைப்பொருளை, கண்டார் - உணர்ந்தவர், மற்று ஈண்டு - திரும்பி இப்பிறப்பினிடத்து, வாராநெறி - வாராதவழியை, தலைப்படுவர் - அடைவார்.

௭. ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு

(பரி-ரை.) இ-ள்,—அங்ஙனங்கேட்ட உபதேசமொழிப்பொருளை ஒருவனுள்ளம் அளவைகளாலும் பொருந்துமாற்றானுந் தெரிய ஆராய்ந்து, அதனுன் முதற்பொருளையுணருமாயின் அவனுக்கு மாறும் பிறப்புளதாக நினைக்க வேண்டா, எ-று.

ஒருதலையாவோர்ந்ததென இயையும். அளவைகளும் பொருந்துமாறும் மேலே உரைத்தாம். இதனால் விசாரங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—உள்ளம் - (அப்படிக்கேட்கப்பட்ட உபதேசப்பொருளை ஒருவனது) உள்ளமானது, ஒருதலையாக - நிச்சயப்பட, ஓர்ந்து - (பிரமாணங்களாலும் யுக்தியாலும்) ஆராய்ந்து, உள்ளது - அதனால் முதற்பொருளை, உணரின் - அறியுமாயின்; பிறப்பு - (அவனுக்குப் பிறவியுள்ளதாக, பேர்த்து - மாறி, உள்ளவேண்டா - நினைக்கவேண்டுவதில்லை.

---

௮. பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு

(பரி-ரை.) இ-ள்,—பிறப்பிற்கு முதற்காரணமாய அவிச்சைகெட வீட்டிற்கு நிமித்தகாரணமாய செவ்வியபொருளைக் காண்பதே ஒருவர்க்கு மெய்யுணர்வாவது, எ-று.

பிறப்பென்னும் பேதைமையெனவும், சிறப்பென்னுஞ் செம்பொருளெனவும், காரியத்தைக் காரணமாக உபசரித்தார். ஐவகைக்குற்றங்களுள் அவிச்சை ஏனைநான்கிற்குங் காரணமாதலுடைமையின், அச்சிறப்புப்

பற்றி அதனையே பிறப்பிற்குக் காரணமாக்கிக் கூறினார். எல்லாப்பொருளி னுஞ் சிறந்ததாகலான், வீடு சிறப்பெனப்பட்டது. தோற்றக்கேடுகளின்மை

யின் நித்தமாய், நோன்மையாற் றன்னையொன்றுங் கலத்தலின்மையின் தூய்தாய்த், தானெல்லாவற்றையுங் கலந்து நிற்கின்ற முதற்பொருள்

* உசஉ-ம், குறளுரையிற் காண்க.

22



விகாரமின்றி எஞ்ஞான்றும் ஒருதன்மைத்தாதல்பற்றி, அதனைச் செம்பொரு ளென்றார். மேல் மெய்ப்பொருளெனவும், உள்ளதெனவும், கூறியதூஉம் இதுபற்றியெனவுணர்க. அதனைக் காண்கையாவது, உயிர் தன்னவிச்சை கெட்டு அதனோடு ஒற்றுமையுற இடைவிடாது பாவித்தல். இதனைச் சமாதி யெனவுஞ் சுக்கிலத்தியானமெனவுங் கூறுப. உயிர் உடம்பினீங்குங்காலத்து அதனால் யாதொன்று பாவிக்கப்பட்டது, அஃது அதுவாய்த் தோன்றுமென் பது எல்லா ஆகமங்கட்குந் துணிபாகலின், வீடெய்துவார்க்கு அக்காலத்துப் பிறப்பிற்கேதுவாய பாவனை கெடுதற்பொருட்டுக் கேவலப்பொருளையே பாவித்தல்வேண்டுதலான், அதனை முன்னே பயிறலாய இதனின் மிக்க வுபாயமில்லையென்பதறிக. இதனாற் பாவனை கூறப்பட்டது.

(தே - ப - ரை.)—பிறப்பென்னும் - பிறவிக்கு முதற்காரண மெனப்படுகிற, பேதைமை - அஞ்ஞானமானது, நீங்க - கெட, சிறப்பென்னும் - மோக்ஷத்திற்கு நிமித்தகாரண மெனப்படுகிற, செம்பொருள் - செவ்வியபொருளை, காண்பது - அறிவது, அறிவு - (ஒருவனுக்கு) மெய்யறிவாம்.

௯ சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் எல்லாப்பொருட்குஞ்சார்பாய அச்செம் பொருளை யுணர்ந்து இருவகைப்பற்றும் அற வொழுகவல்லனாயின் அவனை முன் சார்க்கடவனவாய் நின்ற துன்பங்கள் அவ்வுணர் வொழுக்கங்களை அழித்துப் பின்சாரமாட்டா, எ-று.

களின் முதிர்ச்சி யுடைவர்க்கு) விருப்பு வெறுப்பு அஞ்ஞானம் எனப்படுகிற, இவைமூன்றன்-இக் குற்றம்மூன்றனது, நாமம் - பெயரும், கெட - கெடுதலால், நோய் - (அவைகளின் காரியங்களாகிய) வினைப்பயன்கள், கெடும் - உண்டாதலில்லை.

## ௩௭-ம் அதிகாரம்—அவாவறுத்தல்.

அஃதாவது மூன்னும் பின்னும் வினைதொடர்பறுத்தார்க்கு நடுவுநின்ற உடம்பும் அது கொண்ட வினைப்பயன்களும் நின்றமையின், வேதனைபற்றி ஒரோவழித் துறக்கப்பட்ட புலன்களமேற் பழைய பயிற்சிவயதான் நினைவு செல்லுமன்றே, அந்நினைவும் அவிச்சையெனப் பிறவிக்கு வித்தாமாகலின், அதனை இடைவிடாத மெய்ப்பொருளுணர்வான் அறுத்தல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

௧. அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து.

(பரி-ரை.) எ-து,—எல்லாவுயிர்கட்கும் எக்காலத்தும் கெடாது வருகின்ற பிறப்பினைவிளைக்கும் வித்து அவாவென்று சொல்லுவர் நூலோர், எ-று. உடம்பு நீங்கிப்போங்காலத்து அடுத்த வினையும், அது காட்டுங்கதிநிமித்தங்களும், அக்கதிக்கண் அவாவும் உயிரின்கண் முறையே வந்துதிப்ப, அறிவை மோகம் மறைப்ப, அவ்வுயிரை அவ்வவா அக்கதிக்கட்கொண்டு செல்லுமாகலான், அதனைப் பிறப்பீனும் வித்தென்றும், கதியைந்தானுமாய அவ்வுயிர்வேறுபாட்டினும் அவை தன்மை திரியும் * உற்சர்ப்பிணி அவசர்ப்பிணியென்னுங் கால வேறுபாட்டினும், அது வித்தாதல் வேறுபடாமையின் எல்லாவுயிர்க்குமெஞ்ஞான்றுமென்றும், இஃது எல்லாச்சமயங்கட்கும் ஒத்தலான் என்பவென்றுங்கூறினர். இதனாற் பிறப்பிற்கு அவா வித்தாதல் கூறப்பட்டது.

(தெ - ப - ரை) —எல்லா வுயிர்க்கும் - உயிர்களுக்கெல்லாம், எஞ்ஞான்றும் - எக்காலத்திலும், தவா - கெடாதுவருகின்ற, பிற

---

* உற்சர்ப்பிணியாவது உலகம் பாழ்பட்டுப் போகமுதலியவற்றுடன் வளர்பிறைபோலப் பெருகுங்காலம். அவசர்ப்பிணியாவது அஃது அவற்றுடு தேய்பிறைபோலச் சுருங்குங்காலம்.

பவ - பிறவியை, ஈனும் - விளைப்பதாகிய, வித்து - காரணம், அவா - ஆசையாகும், என்ப - என்று (நூலோர்) சொல்லுவார்.

உ. * வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்.

(பரி-ரை.) இ-ள்.—பிறப்புத்துன்பமாதல் அறிந்தவன் ஒன்றை வேண்டின் பிறவாமையை வேண்டும்; அப்பிறவாமை தான் ஒருபொருளையும் அவாவாமையை வேண்ட அவனுக்குத் தானேயுண்டாம். எ-று.

அநாதியாகத் தான் பிறப்புப் பிணி மூப்பு இறப்புக்களாற் றுன்பமுற்று வருகின்றமையை உணர்ந்தவனுக்கு ஆசை இன்பத்தின்கண்ணேயாகலின் பிறவாமையை வேண்டுமென்றும், ஏனைச் சிற்றின்பங்கருதி ஒருபொருளை அவாவின் அது பிறப்பீனும் வித்தாய்ப் பின்னும் முடிவில்லாத துன்பமே விளைதலின், அது வேண்டாமை வேண்டவருமென்றுங் கூறினார். பிறவாமையின் சிறப்புக்கூறிப் பின் அது வரும்வழி கூறத் தொடங்குகின்றமையின், மற்று வினைமாற்றின்கண் வந்தது.

(தே - ப - ரை.) — வேண்டுங்கால் - (பிறப்புத் துன்பமாயிருக்கையை அறிந்தவன் ஒன்றை) வேண்டினால், பிறவாமை - பிறவாதிருக்கையை, வேண்டும் - விரும்பும்; அது - அப்பிறவாமையானது, வேண்டாமை - (தான் ஒருபொருளையும்) விரும்பாமையை, வேண்ட - விரும்ப, வரும் - (அவனுக்குத்) தானே உண்டாம்.

௩. வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை
யாண்டு மஃதொப்ப தில.

(பரி-ரை.) இ-ள்.—ஒருபொருளையும் அவாவாமையை ஒக்கும் விழுமிய செல்வம் காணப்படுகின்ற இவ்வுலகின்கண் இல்லை; இனி அவ்வளவேயன்று, கேட்கப்படுகின்ற துறக்கத்தின்கண்ணும் அதனை ஒப்பதில்லை, எ-று.

மக்கள்செல்வமும் தேவர்செல்வமும் மேன்மேல்நோக்கக் கீழாதலுடைமையின், தனக்கு மேலில்லாத வேண்டாமையை விழுச்செல்வமென்றும், அதற்கு இரண்டுலகினும் ஒப்பில்லையென்றுங்கூறினர். ஆகமஅளவைபோலாது காட்சியளவை எல்லாராலுந் தெளியப்படுதலின், மக்கள்செல்வம் வரு

---

* இவ்வருமை திருக்குறள் திருவாய்மையிலே "வேண்டுவதால வேண்டும் வேண்டாமை வென்றமையால வேண்டுவதே [illegible] வேண்டாது-வேண்டாமை வேண்டவருமென்றமையால் வேண்டுதே-வேண்டாமை வேண்டுமென்றால்," எனவெடுத்தருளிச்செயப்பட்டது.

## ௩௬௪ ௩௭-ம் அதி. அவாவறுத்தல்

தூ முற்கூறப்பட்டது. பிறவாமைக்கு வழியாமெனவும், விழுச்செல்வமாமெனவும், வேண்டாமையின் சிறப்பு இவ்விரண்டுபாட்டானுங் கூறப்பட்டது.

(தே - ப - ரை.)— வேண்டாமைஅன்ன — (ஒருபொருளையும்) விரும்பாமைபோலும், விழுச்செல்வம் - மேலாகிய செல்வமானது, ஈண்டு - (காணப்படுகிற) இவ்வுலகத்தில், இல்லை - இலது, (அவ்வளவேயன்றி), ஆண்டும் - (கேட்கப்படுகிற) அவ்வுலகத்திலும், அஃது ஒப்பது - அதுபோல்வது, இல் - இல்லை.

ச. தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும்.

(பரி-ரை.) இ-து,—ஒருவர்க்கு வீடென்று சொல்லப்படுவது அவாவில்லாமை; அவ்வவாவில்லாமைதான் மெய்ம்மையை வேண்டத் தானே உண்டாம், எ-று.

வீடாவது உயிர் அவிச்சை முதலிய மாசுநீங்குதலாகலின், அதனைத் தூய்மையென்றும், காரணத்தை காரியமாக உபசரித்துத் தூய்மையென்பதுவாவின்மையென்றும், மெய்ம்மையையுடைய பரத்தை ஆகுபெயரான் மெய்ம்மையென்றுங் கூறினார். மற்று மேலையதுபோல வினைமாற்றின்கண்வந்தது. வேண்டுதல் - இடைவிடாது பாவித்தல். அவாவறுத்தல் வீட்டிற்குப் பரம்பரையானன்றி நேரேயேதுவென்பதூஉம் அது வரும்வழியும் இதனாற் கூறப்பட்டன.

(தே - ப - ரை. —தூய்மையென்பது - (ஒருவர்க்கு) முத்தியெ
ன்று சொல்லப்படுவது, அவாஇன்மை - ஆசையில்லாமையாம்; அது - அவ்வாசையில்லாமை, வாய்மை - மெய்ம்மையாகிய கடவுளை, வேண்ட - விரும்ப, வரும் - தானேயுண்டாம்.

௫. அற்றவ ரென்பா ரவாவற்றார் மற்றையா
ரற்றாக வற்ற திலர்.

(பரி-ரை.) எ-து,—பிறவி அற்றவரென்று சொல்லப்படுவோர் அதற்கு நேரேயேதுவாகிய அவாவற்றவர்கள்; பிற ஏதுக்களற்று அஃதொன்றும் அறாதவர்கள், அவற்றாற் சிலதுன்பங்க ளற்றதல்லது, அவர்போற் பிறவி அற்றிலர், எ-று.

இதனால் அவாவறுத்தாரது சிறப்பு விதிமுகத்தானும் எதிர்மறைமுகத்தானும் கூறப்பட்டது.

(தே - ப - ரை )—அற்றவரென்பார் - (பிறவி) அற்றவரென்று சொல்லப்படுமவர், அவாஅற்றார் - (அதற்குநேரே ஏதுவாகிய)



ஆசை அற்றவர்; மற்றையார் - பிற ஏதுக்கள் அற்று அஃதொன்றும் அறாதவர், அற்று ஆக அற்றதுஇலர் - (அவ்வேதுக்களாலே சில துன்பங்கள் அற்றவல்லாமல், அவர்போற் பிறவியற்றிலர்.

௬ அஞ்சுவ தோரு மறனே யொருவனை
வஞ்சிப்ப தோரு மவா.

(பரி-ரை) எ-து —மெய்யுணர்தலாகிய காரணங்களெல்லாம் எய்தி அவற்றான் வீடெய்தற்பாலனை ஒருவனை மறவிவாயிற் புகுந்து பின்னும் பிறப்பின்கணே வீழ்த்து வஞ்சிக்கவல்லது அவா; ஆதலான அவ்வவாவை அஞ்சிக்காப்பதே அறமாவது, எ-று.

ஓருமென்பன அசைநிலை. அநாதியாயப்போந்த அவா, ஒரோவழி வாய்மை வேண்டலையொழிந்து பாதுகாவானாயின், அஃதிடமாக அவனறியாமற்புகுந்து பழையவியல்பாய் நின்று பிறப்பினையுண்டாக்குமாகலான், அதனை வஞ்சிப்பதென்றார். காக்குமாறு வாய்மை வேண்டலை

இடைவிடாது பின்றா அது செய்யாமற் பரிகரித்தல். இக்குறளால் அவாவின் குற்றமும் அதனைக் காப்பதே அறமென்பதூஉங் கூறப்பட்டன.

(தே-ப-ரை.—ஒருவனை - துறந்த ஒருவனை, வஞ்சிப்பது - பின்னும் பிறவியிலே தள்ளிக்கெடுக்க வல்லது, அவா - ஆசையாம் (ஆகலால்), அஞ்சுவது - அவாவினை அஞ்சிக்காப்பதே, அறன் - அறமாவதாம்

---

எ. அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும்

(பரி-ரை.) இ-ள்,—ஒருவன் அவாவினையஞ்சித் தொடாமெடுக்கவல்ல னாயின், அவனுக்குக் கெடாமைக்கேதுவாகிய வினை தான் விரும்புநெறி யானே உண்டாம் எ-று.

கெடாமை - பிறவித்துன்பங்களான் அழியாமை. அதற்கேதுவாகிய வினையென்றது மேற்சொல்லிய துறவறங்களை. வினை - சாதியொருமை. தான் விரும்புநெறி - மெய்வருத்தமின்றி. அவாவினை முற்ற அறுத்தாலுக்கு வேறறஞ்செய்யவேண்டா, செய்வனவெல்லாம் அறமாமென்பது கருத்து. இக்குறளால் அவாவறுத்தார் சிறப்புக் கூறப்பட்டது.

(தே-ப-ரை)—அவாவினை - (ஒருவன்) ஆசையை, ஆற்ற அறுப்பின் - முழுதுமறுத்தால், [வஞ்சித்தும் வாராமற்கெடுக்க வல்லவனாயினென்றபடி], (அவனுக்கு) தவாவினை - கெடாமைக்கு



ஏதுவாகியசெயல், தான்வேண்டுமாற்றால் - தான்விரும்பும் வழியினால், வரும் - உண்டாகும்.

---

